*Give me not O God, that blind, fool faith in my friend that sees no evil where evil is, but give me, O God, that sublime belief that seeing evil I yet have faith."*
*" Seek Truth wherever you can find it," But, "Make your choice and stick to it till you reach the End."*

"பஞ்சவிம்சதிபாக்கியம்"]  ஸத்தியம் வத—**SPEAK THE TRUTH.**  ["Our Jubilee Year."

"HITCH YOUR WAGON TO A STAR."  " TO THINE OWN SELF BE TRUE."




அன்பேபவன் : அறிவேசக்தி : ஓம் தத்ஸத்.]  [God is Love : Knowledge is Power : *Aum*

**" New Series"**  ஸத்தியமே ஜெயம்—**SATYAMEVA JAYATE.**  **"Approved"**

புத்தகம். **25.**]  பிங்களஸு வைகாசிமீ, **1917**ஸு மேமீ.  [சஞ்சிகை **2.**

## Business "Terms."

*N.B.*—To avoid all possibility of misapprehension, we *reiterate* our " terms" (approved by our constituents and by Government) which, from the beginning, are :—

1. Cash or Remittance with Order : Rs. 5 per Vol.; or,
2. *One month's credit at the arrears rate* : Rs. 6 per Vol.
3. Arrears to be cleared on rendering of *a/cs.* or by V.P.P.
4. All Indents registered for School Edition only and to begin with the current volume (corresponding with Tamil or Official year, April-March).
5. Subscriptions registered to continue from Vol. to Vol. and not to be discontinued †in the middle of a Vol.
6. No popular edition issued owing to scarcity of paper.
7. Monthly parts (spare or sample) 8 (eight) annas each.

## General Notice.

i. The *terms* offered are for regular subscribers only ;
ii. no exception to these rules can be made or recognised ;
iii. short credit allowed should not be misused ;
iv. unpaid accounts are subject to " fluctuations " and overcharges ;
v. all arrears should be fully paid *within* three months (*time being an important factor*) ;
vi. every outstanding account will be charged *One Rupee Extra* per Vol. or any part thereof for every notice or Reminder sent after this period;
vii. all subscribers are *ipso facto* bound to observe the rules.

(*By Order of the Managing Committee.*)

THE MANAGING AGENTS, " VIVEKACHINTAMANI,"
*Novr.* 1916.] *Lalitalaya,* 19, *Adam Street, Mylapore.*

☞ *Calculations made are based on the principle of one copy for each school which should be strictly adhered to.*

†Notice of discontinuance to have effect must be given in time in writing before a New Volume begins in April and after all the arrears due to the end of the current Volume have been paid and account settled.

*N.B.*—Due care is taken in addressing and personally handing copies to the Post Office at Brodies' Road and there the publishers' responsibility ceases. Evidence of posting is preserved and can be made available for enquiries. The publishers do not undertake to replace missing copies but will endeavour to supply spare copies when available, on payment, if applied for within 30 days after the 15th of each month for which such copies are due.

Copies lost in transit, if promptly brought to notice, will be referred to the Postmaster-General direct who has written to say " that every effort will be made to trace them." " If you should have further cause for complaint of the loss or delay of articles, similarly posted or addressed " continues the same high authority, " I shall be glad if you will let me know *without delay,* giving me the fullest particulars possible." Addresses should invariably give the name of the post office and district to prevent miscarriage or non-delivery by post.

## "HITCH YOUR WAGON TO A STAR." IDEALS FOR YOUNG MEN.

Emerson says: " Hitch your wagon to a star.' Jesus' call to "All ye that labour and are heavy laden" refers to this wagon load of cares, trials and tribulations which are the usual burden of this wordly life. The Tamil Poet also says: " இல்வாழ்க்கை யென்னும் இயல்புடைய வான்சகடம்." Thus is the figure of speech common to all, be they of the East or the West, which refers to the burdens of this life to a " Wagon " loaded with the neeessaries and luxuries of life. A " Star " shines high in the blue Empyrean far above the cares and turmoils of this world, shedding its light and influence on Earth and yet not affected' by that which is of the Earth, Earthy. So is the Ideal of Life far above the burdens of Life. " The Ideal of Life " is made up of many ideals which are all parts of the whole. And what are ideals ? " Ideals are truths that have not yet effected themselves for men, the realities of a higher plane of existence which have yet to fulfil themselves on this lower plane of life and matter, our present field of operation."

### OUR NATIONAL IDEAL.

In the case of individuals as well as nations, the influence of ideals is always great. We shall here indicate a few ideals for our young-men as set forth by a teacher but the Ideal of our Nation is the Hero and Heroine of the Ramayana. So the great seers of the Upanisheds teach and give it to the world as the Maha Mantra combined with the Ideal of Sri Krishna who is not different from Sri Rama but a development and fulfilment of the Earlier Ideal of Sri Rama to suit the March of Time which brings on its own changes.

" *Hare Rama, Hare Rama,*
*Rama Rama Hare, Hare !*
*Hare Krishna, Hare Krishna,*
*Krishna Krishna Hare, Hare* !"

And if we would pursue this ideal of our nation to our own times it is quite casy to do so, and we have only to add :—

*Hare Rama, Hare Krishna,*
*Rama-Krishna Hare, Hare* !

### IDEALS FOR THE YOUNG.

And now we come to the few ideals which our young men should learn to realise in the early years of their life :

(i) *Cultivate love of knowledge and a love of study.*

" A good book is the life-blood of a master-spirit embalmed and treasured-up on purpose for a life beyond life." Such a book is Ramayana as also the Mahabharata. They are illustrations of life and characters to be found in the great Book of Nature. Learn " something of everything and everything of something."

(ii) *Pay special attention to Indian culture and studies, not neglecting western culture and studies.*

(iii) *Cvltivate habits of observation, of inquiry and research.*

(iv) *Cultivate habits of industry and application.* '*Genius*' has been defined by Carlyle as merely "*a capacity for taking pains.*"

" The heights by great men reached and kept
Were not attained by sudden flight;
But, while their companions slept
They were toiling upward in the night."

The mission of the West to the East is the mission of a strenuous life—the ideal which our ancients practised and lived up to, with what result our glorious civilisation of the past proclaims to a wondering world. As Sir Alfred Lyall has put it :

" Fast and pray—said the sages of Ind
We know not what prayer and penance may give
For visions are fading and words are wind
The faith we bring you is " Labour and live "

Our own ideal is : live and learn. We learn to live first and then live to learn until we learn the great truth of *Existence-Knowledge-Bliss.*

(v) *Cultivate the ambition of patritotic Service* which is but an aspet of *Samashti-Sevai* the so-called " social service " which is the privilege of serving our fellowmen as the service most acceptable to God, the Maker of us all.

(vi) And last but not the least : *Realise the nobility of life and conduct yourself in a fitting manner.*

In the memorable words of Gladstone, ' Remember that life is no mean and grovelling thing that you are to shuffle through as best you can, but a lofty and exalted dùty." Again in the words of Browning:—

" *This world's no blot for us*
*Nor blank; it means intensely and means good.*
*To find out its meaning is my meat and drink.*'

"No good work is ever lost." "My best wishes for the success of your publication"—*Sir Harold Stuart, K. C. V. O.*

புஸ்தகம்-25:] "பஞ்சவிம்சதிபாக்கியம்" "Our Jubilee Year." [சஞ்சிகை-2.

"The Children's Favourite, the Teachers' Help, and the Parents' Guide."

பிங்கள௵ வைகாசி௴.

# விவேக சிந்தாமணி

May-June. 1917.

FIRST ESTABLISHED, 1892. OUR JUBILEE YEAR, 1917.

"பெற்றோர்கள் தாழவப்பர் பிள்ளைகளி லாசையுள்ளோர்
கற்றே மெனவுகந்து கற்பர் பின்னும்—மற்றோர்கள்
மாச்சரியத் தாலிகழில் வந்ததென்னோஞ் சேயிகழ்கை
யாச்சரிய மோதா னவர்க்கு."

## "HITCH YOUR WAGON TO A STAR"

### IDEALS FOR YOUNGMEN.

## இலக்ஷியத்தில் கண்ணையிரு.

### சிறுவர்க்கான இலக்ஷியங்கள்.

"தாரகலக்ஷியம் தரணியில் சுகமளிக்கும்." தாரகம் என்றால் நக்ஷத்திரம். தாரகலக்ஷியம் என்றால் நக்ஷத்திரம்போலுள்ள உயர் லக்ஷியம். இலக்ஷியம்போலிருக்கும் இலக்ஷணமாதலால், உயர் லக்ஷணம் படியவேண்டில் உயர் லக்ஷியத்தைக் கைக்கொள்ளல்வேண்டும். இகபரமிரண்டிற்கும் இதுவே சாசுவதமான சாதகமும் சாதனமுமாம். ஆத்ம லாபத்தை யுத்தேசத்துச் செய்யும் தாரகலக்ஷிய அப்பியாசத்துக்குத் "தாரகயோகம்" என்று பேரிட்டு ஆதிசங்கராசாரியர் அவர்கள் அதைப் பற்றி அருமையான கிரந்தமொன்றும் எழுதியிருக்கிறார். நித்தியப்படி வாழ்க்கையில் சுகம் பெறவேண்டுமானால் அதற்கும், உயர்லக்ஷியம் அவசியம் என்பதை வற்புறுத்தவேண்டி அமெரிகா தேசத்தவரான எமர்ஸன் சொல்லிய வாக்கியத்தை இங்கு எடுத்தாண்டிருக்கிறோம். அதுவே நமது "விவேகசிந்தாமணி"யின் நோக்கத்தைக் குறிப்பதாகவும் இருப்பதால் அதைப்பற்றி இங்கே சிறுவர்களுக்கு உபயோகமாகும்படி சில வார்த்தைகள் சொல்ல விரும்புகிறோம்.

மனிதன் பாவனா புருஷனாயிருக்கிறான். பாவனா சக்தியில்லாவிட்டால் அவனுக்குப் புருஷத்துவமில்லை. "யத்பாவம் தத்பவதி" யென்பது ஸத்யமாதலால் மனிதன் எப்படி நினைக்கிறானோ அப்படியே ஆகிறான். நினைப்பு மறப்புத்தொழில்களுக்குக் கருவியாக விருப்பது மனம். இந்த மனம் தானே சங்கல்ப விகல்ப (நினைப்பு மறப்பு) ரூபமாக விருக்கின்றது என்பது சித்தாந்தமாயுணர்ந்த உண்மை. இந்த உண்மையை அநுபவத்தில் கண்டறிய வேண்டுமேயன்றி வேறு விதத்தில் கண்டறிவது சாத்தியமில்லை. இந்த அநுபவஞானமுள்ளவர்கள் மனத்தை அடக்கி யாள்வது தானே எல்லா ஆட்சியிலும் மஹத்தான பேராட்சியென்று சொல்லியிருக்கிறார்கள். குதிரை அல்லது 'மோடார்' சவாரிக்குரிய சாதனமாயிருந்தாலும் அதை அடக்கியாளத் திறமையில்லாதவர் அவற்றையுபயோகித்தால் ஆபத்து சம்பவிக்கும் என்பது திண்ணம் அல்லவா? அதுபோலவே மனதை அடக்கியாளத் தெரியாதவர்கள் வேறு விதமாய் அதை உபயோகிக்க யோக்கியதை யற்றவர்களாகிறார்கள். அயோக்கியர்களுக்கு அதிகாரம் சித்திக்காது. அநதிகாரி செய்யும் காரியமுயற்சிக்கு எப்போதும் பழுதுவரும். ஆதலால் மனதை யடக்கியாளவேண்டியது அவசியமாகவிருக்கிறது.

இதற்குக் கைகண்ட சாதனங்கள் சிக்ஷை, தீக்ஷை, லக்ஷியம் என மூவகைப்படும். சிக்ஷையென்பது மனதைத் தடுத்தாளல்; தீக்ஷையென்பது நம் இஷ்டம்போல் அதை நடத்தல்; லக்ஷியம் என்பது குறித்த ஒன்று எதும்வா

அதுவாகும்படி தைலதாரைபோல் இடைவிடாது சிந்தித்துச்சாதித்தல். இம்மூன்றுக்கும் பரம சாதனமாயிருப்பது இலக்ஷியத்தில் கண்ணுயிருத்தல். இதைத்தான் "Hitch your wagon to a Star" என்று சொல்லியுள்ளார். ஏனெனில், இலக்ஷியத்தில் கண்ணுயிருக்கிறவனுக்கு மனது தியேயாகாரமானபோது அது சகலத்துக்கும் சாதகசாதனமளிப்பது ஆகும். ஸ்ரீராமர் பாலப்பருவமாயிருக்கையில் தானே வசிஷ்டர் அவருக்கு ஞானவாசிஷ்டம் அவ்வளவையும் கதைகளால் உண்மை விளங்கச்செய்து ஓதினர். இராமர் குணம் பெற்றது ஞானவாசிஷ்ட மஹிமையினுல் என்று சொல்லலாம். அந்தக் கிரந்த முழுவதும் உயர் லக்ஷியத்தை உண்மையாளர் கைப்பிடித்தனுபவித்த விதத்தைச் சொல்கிறது. நமது தேசத்துக்கும் ஜனங்களுக்கும் இராமரே தான் பரமபுருஷனுவார். ஆகையால் அவரே தான் நாம் கண்டிுிந்து அனுபவிக்கவேண்டிய லக்ஷியமாயிருக்கிறுர். இராமரைவிட்டு சீதையைப் பிரிக்கமுடியாது. சீதையைப் பிரித்த இராவணன் பட்ட பாடு உலகறியுமே. தாரகத்தினின்றும் அதன் ஒளியைப் பிரிக்கலாமா? முடியாதுபோல் இராமரை விட்டு அவருடைய சக்தியம்சமான சீதையைப் பிரிக்கமுடியாது. அப்படியே லக்ஷ்மணரும் பிரிக்கமுடியாதவராயிருக்கிறுர். இராமரும் லக்ஷ்மணரும் பிரிக்கமுடியாதவராயிருக்கிறுர்கள். இராமரும் லக்ஷ்மணரும் நினைத்தலும் ஆற்றலும் போல் இணைபிரியாத தன்மை வாய்ந்துள்ளார். முன் காலத்தில் ராமாயண படனத்தாலேயே எழுத்து வாசனையறியாத குடியானவர்களும் பெண்பாலாரும்கூட உயர் லக்ஷணம் பொருந்தியவர்களாகி அவர்களுடைய பாரம்பரிய புண்ணியத்தால் இப்பொழுதும் நம்தேசத்து வியவசாயிகளும் ஸ்திரீகளும் எழுத்து வாசனையில்லாதவர்களானுலும் குணசீலம் பொருந்தியவர்களாகவிருக்கிறுர்கள். இதை ஸர் ஜ்யார்ஜ் பர்ட்வூட் அவர்கள் ஒப்புக்கொண்டு உலகிலுள்ள வியவசாயக்குடிகள் எல்லாரிலும் இந்தியாவிலுள்ள எழுத்து வாசனையறியாத வியவசாயக் குடிகள் மனேதர்மத்தில் சிறந்தவர்களாயிருக்கிறுர்கள் என்று சொல்லியிருக்கிறுர். கல்கத்தா ஹைகோர்ட்டு ஜட்ஜாயிருக்கும் ஸர் ஜான் வூட்ராப் அவர்கள் இப்பத்திராசிரியருக்கு எழுதிய கடிதத்தில் இந்தியாவிலுள்ள வியவசாயக்குடிகளும் ஸ்திரீகளும் நமது ஜாதீய விசேஷமான குணசீலத்துக்குப் பொக்கிஷமாயிருக்கிறுர்கள் என்றும், அதற்குக் கேடு வராதபடி பிரதம வித்யாபோதனை செய்வதே உத்தமம் என்றும் சொல்லியிருக்கிறுர். நாமும் அந்த உயர்லக்ஷியம் கொண்டே சாமான்ய ஜனங்களுக்குள் அறிவைப் பரவச்செய்வதே தொழிலாக இந்த 32-வருஷ காலமாக உழைத்து வந்திருக்கிறேும். இங்லீஷ் படித்தவர்கள் நமது பூர்வலக்ஷியத்தைமறந்து நவநாகரீகபுஞ்சங்களாகித் திரிவதைக்காண தேசக்ஷேமத்தில் சிரத்தையுள்ளவர்கள் எல்லோரும வருத்தப்படுகிறுர்கள். ஆதலால் நமது சிறுவர்கள் அந்தவழியில் செல்லாதபடி உபாத்திமைத்தொழில் பூண்ட ஒரு சிரேஷ்டர் அவருக்குப் போதனையாகச் சொன்ன லக்ஷியசாதனங்களை இஙகெடுத்துரைக்கிறேம. இவையெல்லாம்ஸ்ரீராமர்ஸ்ரீகிருஷ்ணர் இவர்களுடைய பேரிலக்ஷிய வெள்ளத்திலடங்கிய திவலைகள் போலுமானுலும் சிறுவர்கள் கையாடவேண்டிய முக்கிய அம்சங்களாக விருக்கின்றன. நமது தேசலக்ஷியும் இன்னதென்றுணர்த்த, மஹாமந்திரமென்று உபநிஷத்து இருஷிகள் உபதேசித்திருப்பது ஒன்றே போதுமிருக்கிறது. அது இது :—

> "ஹரே ராம, ஹரே ராம,
> ராமராம ஹரே, ஹரே !
> ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண"
> கிருஷ்ண கிருஷ்ண ஹரே, ஹரே !".

இந்தப் பூர்வீகமான சாசுவத லக்ஷியத்தை இக்காலம் வரையில் செல்லத்தக்கதாகச் செய்ய வேண்டில் இந்த மஹாமந்திரத்தோடு இன்னும் ஒருமந்திரம் கூடச்சேர்த்தால் போதுமானதாயிருக்கிறது.

அது இது :— முன்சொன்ன மந்திரங்களுக்குப் பின் இதைக் கூட்டிக்கொள்ளவும்.

"ஹரே ராம, ஹரே கிருஷ்ண,
ராமகிருஷ்ண ஹரே, ஹரே !"

ஸ்ரீராமகிஷ்ணதேவர் எழுத்து வாசனையறியாதவராயிருந்தும் குடதிசையும் குணதிசையும் மெச்சும் மஹாத்மாவும் மஹாஞானியுமாக இருந்து விளங்கினர். இவர்கள் எல்லாரும் அவதாரமஹிமையினல் ஸ்வயம்பிரகாசராகவிளங்கினலும் விடாமுயற்சியினலும் ஊக்கத்தினலும் உண்மையொழுக்கத்தாலும் இவர்கள் போனவழி பின்பற்றிநடத்தல் எல்லாருக்கும் சாத்தியமேயாகும். "எண்ணும் எழுத்தும் கண்ணெனத்தகும்" என்று இருப்பதால், நம்தேசத்துச்சிறுவர்களும் சிறுமிகளும் எண்ணும் எழுத்திலும் குணசீலராகவேண்டும். அவர்கள் மனதில் வைத்துச்சிந்தித்து அநுபவத்திற் கொண்டுவந்துய்யவேண்டிய ஆரம்ப லக்ஷியங்கள் ஆறெனவெடுத்து அவற்றைக் கீழே வரைகிறோம்.

(I) ஓதுவதொழியேல்: பள்ளிப்பருவம் கடந்தபின்னும் ஓதுவதொழியேல். கல்விக் கேள்விகளிலுள்ள ஆசை வரவரப் பெருகவேண்டுமேயன்றி குறுகக் கூடாது.

(II) மூத்தோர்சொல் வார்த்தையமிர்தமாய் முன்னோர் தர்மத்தைக் கைவிடாது பழகு.

(III) ஊக்கமது கைவிடேல்: ஊக்கமும் உழைப்பும் உண்மைக்குச் சாதனம்.

(IV) தரிசனம் விசாரம் திடஞானமிவை மூன்றும் சாலப்பெருகச் சதாவெண்ணிப் பழகு.

(V) ஊருக்குழைப்பதே உத்தமதர்மமால் பேருக்குழைக்காது ஊருக்குழைத்து உபகாரியாக ஸமஷ்டி சேவையைச் சாதனமாயனுசரி.

(VI) எடுத்த ஜன்மத்தைப் பாழாக்காதே! உண்மையை உணர்ந்துய்தல்தானே ஜன்மசாபல்யமென்றுணர்ந்து உண்மையை அனுபவிக்க உள்ளளவும் உழை. உழைக்கும் வழியறிந்துழைப்பது தானே பிழைக்கும் வழியாய்ப் பெரியோர்கள் செப்பியுள்ளார். இதற்கு 'நிஷ்காமியதர்மம்' என்று சொல்வதுமுண்டு. இதைவிட மேலானதர்மம் இங்கும் அங்கும் எங்கும் இல்லை. இது ஸத்யம், ஸத்யம், முக்காலும் ஸத்யம், ஓம்தத்ஸத்.

## A PLEA FOR INSTRUCTION OF THE SCIENCES THROUGH THE MEDIA OF VERNACULARS.

## சுதேச பாஷைகள் மூலமாக ஜனங்களுக்கு சாஸ்திர ஞானமுண்டாக்க வேண்டுமென்பதைப்பற்றி.

இந்தியர்களில் அனேகர், பி. ஏ., எம். ஏ., பரீக்ஷைகளில் அதிகௌரதையுடன் தேர்ந்து, பெயர் பெற்றவர்களாக விருந்தபோதிலும், ரசாயன சாஸ்திரம் (Chemistry) தாபரசாஸ்திரம் (Botany), பிருதிவி சாஸ்திரம் (Geology) முதலிய சாஸ்திரங்களில் ஸ்வயமாய் ஆராய்ச்சிசெய்து, நமது தேசத்திலிருக்கும் புல், பூண்டு முதலிய தாபர வஸ்துக்களின் குணங்களையும், பலவித லோகாதிகளிருக்கும் இடங்களையும், அவைகளை யெடுக்கும் விதங்களையும், இன்னும் மற்றக் கைத்தொழில்களைத் தற்கால சாஸ்திரங்களை யனுசரித்துச் சீர்படுத்தும் வழிகளையும், அறிந்து இத்தேசத்தின் க்ஷேமத்தை அபிவிருத்திசெய்ய யாதொரு ஏற்பாடும் அவர்கள் செய்யவில்லை என்பது அனைவருக்கும் தெரிந்தவிஷயமே.

இதற்கு அனேக காரணங்களுண்டு. முதலாவது, நமது தேசத்தவர்க்கு வஸ்துக்களின் தன்மையை அறிய ஆவலும், அவைகளை ஊர்ந்துபார்க்கும் சக்தியும், மிகச்சொற்பமே. ஓர் ஐரோப்பியப்பையன் சிறுவனயிருக்கும் பொழுதே, விநோதமான பக்ஷிகளைப் பிடிப்பதிலும், புஷ்பங்கள், பூண்டு முதலியவைகளைச் சேர்ப்பதிலும் சிறு பூச்சிகளைப் பிடித்து அவைகளின் நடத்தைகளை கவனிப்பதிலும், ஆசையுள்ளவனகி, அம்மாதிரி விளையாட்டுக்களில் காலத்தைக் கழிக்கின்றான். இளமைப் பருவத்தில் இப்படியிருப்பதால், நாளாக நாளாகதான் சிறுபிராயத்தில் பார்த்த விஷயங்களின் தன்மையைப்பற்றி அதிகமாகஅறிய அவனுக்கு ஆசக்தியுண்டாகிறது. ஆகையினல்,

சாஸ்திரங்களை அதியாவலுடன்கற்று, அவைகளில் சுவய ஆராய்ச்சியும் செய்கிறான். நம் பிள்ளைகளோ பிறந்தது முதல் அம்மாதிரியான விளையாட்டுக்களைக் கொஞ்சமேனு மறியார்கள். பெரியோர்களும் அம்மாதிரி செய்வதினால் பிள்ளைகளுக்குண்டாகும் நன்மைகளையறியாமல், கூடியசிக்கிரத்தில் பாஷா புஸ்தகங்களைப் படிக்கும்படி, பள்ளிக்கூடங்களுக்கனுப்பி விடுகிறார்கள்.

மேலும், இக்காலத்திய ஐரோப்பிய ஸ்திரீகள் அனேகமாய், மேற்குறித்த சாஸ்திரங்களின் பிரதான அம்சங்களையாவது அறிந்திருக்கின்றமையால், தங்கள் குழந்தைகள் வேடிக்கையாய்ச் சேகரிக்கும் செடி, கொடி, புஷ்பம், கிளிஞ்சல், பூச்சிகள் முதலியவைகளை வைத்துக்கொண்டு, அவர்களுடன் அவைகளைப்பற்றி சம்பாஷித்து, அறிவை வெகு சுலபமாய் அவர்களுக்குப் புகட்டிவருகின்றார்கள். நமது தேசத்து ஸ்திரீகளின் கல்வி அந்த ஸ்திதியை அடைவதற்கு வெகுகாலம் செல்லவேண்டுமென்று தோன்றுகிறது ; அப்பேர்ப்பட்ட தாயார்கள் உதிக்கும்வரையில், நமது பிள்ளைகளுக்கு இளவயதில் அறிவைப் புகட்டுதல் கடினமாகவேயிருக்கும்.

நமது வாலிபர்களின் சாஸ்திராப்பியாசத்திற்கு இம்மாதிரியான இடையூறுகள் இருப்பதுமன்றி, அவர்களுடைய பதினைந்தாவது வயதுவரையில், சாஸ்திர சம்பந்தப்பட்ட யாதொரு விஷயங்களையும் அவர்களுக்குக் கற்றுக்கொடுக்கிறதில்லை. அவர்களுடைய பாலியம் முழுவதும், ஆங்கிலேய பாஷையின் இலக்கிய இலக்கணங்களைக் கற்பதிலேயே செலவழிந்து போகிறது. பதினைந்து, பதினாறுவது வயதில், ரசாயன சாஸ்திரத்தினுடையவும், ஜடசாஸ்திரத்தினுடையவும் (Physics) மூலபாகத்தைக் கற்க அவர்கள் ஆரம்பிக்கிறார்கள். அப்புத்தகங்கள் அன்னிய பாஷையாகிய ஆங்கிலேய பாஷையிலெழுதப்பட்டிருக்கின்றமையால், பாஷாப் புத்தகங்களைப் படிப்பதுபோல, அவைகளைக் கற்பதன்றி, அவைகளிலுள்ள தத்துவங்களைச் சரியாக கிரகிப்பதில்லை. இரண்டு மூன்று வருஷம், அவைகளைப் படித்து, மறந்து விடுகிறார்கள். பிறகு, பி. ஏ., பரீக்ஷைக்குப் படிக்கத்துவக்கும் பொழுது, அச்சாஸ்திரங்களைக் கற்று அறிவை விருத்திபண்ணவேண்டுமென்கிற ஆவலில்லாதவர்களாக விருப்பினும், பரீக்ஷைகளில் தேறுவதற்கு அதுவுமோர் மார்க்கமாயிருப்பதால், சில பிள்ளைகள் சாஸ்திரங்களைப் படிக்கின்றார்கள். பரீக்ஷையில் தேர்ந்தவுடன், அறிவை விருத்திசெய்வதையும் நிறுத்திவிடுகின்றார்கள். அவர்களில் சிலர், அப்படி அபிவிருத்திசெய்ய விருப்பமுள்ளவர்களாக விருப்பினும், அதிகடினமான ஆங்கிலேய பாஷையைக் கற்பதில் வெகு சிரமப்பட்டுச் சோர்ந்துபோய், தங்கள் விருப்பத்தை முடிவுக்குக் கொண்டுவர அசக்தராயிருக்கின்றார்கள்.

நமது வாலிபர்களின் சாஸ்திரப் பயிற்சி இப்படியிருக்க, நமது பெண்களின் பயிற்சி இதினும் தாழ்ந்ததாகவிருக்கிறது. நமது வாலிபர்கள் ஆங்கிலேய பாஷையை அறிந்திருப்பதால் தங்களுக்கிஷ்டப்பட்டபோது, அப்பாஷையில் எழுதப்பட்டிருக்கின்ற சாஸ்திரப் புத்தகங்களைப் படித்து அறிவைத் தேடிக்கொள்ளக்கூடியவர்களாக விருக்கின்றார்கள். நமது பெண்களோ, தமிழை எழுதப் படிக்கத் தெரிந்துவிட்டால், எல்லாவித்தையும் வந்துவிட்டதாக எண்ணுகிறார்கள். இதுவரையில் நமது பெண்களின் கல்வி இதற்கு மேற் போகவில்லை. தமிழ்பாஷையில் எழுதப்பட்ட சாஸ்திரபுத்தகங்கள் அதிகமாக இல்லாமையால், அச்சாஸ்திரங்களில் தேர்ச்சியடைந்து அறிவை விருத்திசெய்யக் கொஞ்சமேனும் ஹேதுவில்லாதவர்களாக அவர்கள் இருக்கிறார்கள்.

இவ்விஷயங்களையெல்லாம் யோஜித்துப் பார்க்கும் வேளையில், நமது சிறுவர்களுக்கு தங்கள் அறிவை விருத்திபண்ணுவதில் ஆசை உண்டாகும்பொருட்டு, அவர்களுடைய சொந்த பாஷையாகிய தமிழ் மூலமாக, தாபரசங்கமாதி வஸ்துக்களின் பிரதான குணங்களைப் போதிக்கவேண்டுமென்று தோன்றுகிறது. அதற்காக ஆங்கிலேய பாஷையில் எழுதப்பட்டிருக்கின்ற சாஸ்திரப் புத்தகங்களை, தமிழில் எளியநடையில் மொழிபெயர்த்து கீழ் வகுப்புக்களிலேயே பாடமாக வைக்கவேண்டும்.

ஆனால் இப்படிச் செய்வதற்குத் தடையாக ஒன்றிருக்கின்றது. யாதெனில்: ஆங்கிலேயப் புத்தகங்களில் வழங்கும் சாஸ்திரீக வார்த்தைகளுக்குச் சரியான பதங்கள், தமிழ்ப்பாஷையில் அகப்படுவதில்லை. ஆகையினால், அம்மாதிரி விஷயங்களைப்பற்றி எழுதுவது சற்று கடினமாக விருக்கின்றது.

ஐரோப்பிய சாஸ்திரங்களில் தேர்ந்தவர்களும், தமிழ்ப்பாஷையைக் கற்றறிந்தவர்களுமான பல கனவான்கள் நமது நாட்டிலிருக்கின்றார்கள். தமிழ்ப்பாஷையில் சாஸ்திரீக பதங்களைத் தொடுத்து அவைகளைப் புத்தகங்களில் உபயோகித்து யாவருக்கும் தெரியும்படி வழக்கத்திற்குக் கொண்டுவருவது, அவர்கள் கடமை. அவர்கள், மேற்குறித்தபடி யாவருக்கும் புலப்படும்படியான சுலபமான நடையில், சாஸ்திர விஷயங்களைப்பற்றி எழுதி பிரசுரிப்பார்களாகில், நாளாவட்டத்தில் நமது தேசத்தவர்களின் அறிவு விசாலிப்பதுமன்றி, நமது தேசக்ஷேமமும் அனேக மார்க்கங்களில் விருத்தியடையுமென்பதற் கையமில்லை.

## ON THE CHARACTERISTICS OF TEACHERS.

## உபாத்தியாயருக்கு இருக்கவேண்டிய லக்ஷியங்கள்.

சென்றமாதச் சஞ்சிகையில், மாத விசேஷங்களின் கீழ், கும்பகோணம் காலேஜ் பிரின்ஸிபாலாயிருந்த போர்ட்டர் துரையவர்களின் குணநிசயங்களைக் குறிப்பிட்டு உபாத்தியாயர்களும், போதகர்களும், தங்களுடைய மாணுக்கர்களிடத்தில் அனுதாபமும் அபிமானமுமுள்ளவர்களாயிருப்பதோடு, அவர்களுடன் சமமாகப்பழகி, பாடத்தைப் போதிக்கும் அசிரியராயிருப்பதோடு இராமல், மெய் நண்பராகவும், புத்திமதிச்சொல்லி வழிகாட்டுபவராகவும் (Teacher, friend and mentor) இருக்கவேண்டும் என்று திவான்பகதூர் வி. பி. மாதவராவ் அவர்கள் சொல்லியதைக் குறிப்பிட்டுச் சொன்னோம்.

இப்பொழுது, நமது பையன்களுடைய நன்னடைக்கைக்கும் அபிவிருத்திக்குமான பொறுப்புள்ள இத்தொழிலை வகிப்பவர்களுக்கு இருக்கவேண்டிய முக்கிய லக்ஷணங்களைப் பற்றி சிறிது விவரித்து எழுதுவோம்.

1. சரீரதிடம். முதலில் தேக ஆரோக்கிய முள்ளவர்களாயிருக்கவேண்டும். சரீரத்துக்கும் மனதுக்கும் நெருங்கிய சம்பந்தமுண்டு. அசௌக்கிய ஸ்திதியிலிருப்பவனிடத்தில்போய் நாம் ஒரு விஷயத்தை யோசனை செய்து சொல்லும்படி கேட்டால் அவன் தன்னால் அப்பொழுது முடியாதென்பான். அவன் மனம் வேலைசெய்யாது. அதே மாதிரி மனவியாகூல மடைந்தவனுடைய உடம்பு மெலிந்துபோகும். இதனால் மனதும் சரீரமும் ஒன்றோடொன்று சம்பந்தப்பட்டிருக்கிறதென்று தெரிகிறது. சரீரம் திடமாயிராவிட்டால் மனது திடமாயிராது. ஆகையால் தேகாரோக்கியமில்லாதவர்களை உபாத்தியாயர் வேலைக்கு நியமிக்கக்கூடாது. இவர்களுக்கும் எப்பொழுதும் குதித்து விளையாடி குதூகுலமாயிருக்கும் சிறு பிள்ளைகளுக்கும் ஒத்துவராது.

அற்ப விஷயங்களுக்கெல்லாம் கோபங்கொண்டு கடினமாய்த் தண்டிப்பார். நோயுள்ளவர்களாயிருந்தால் அடிக்கடி வீட்டிலிருக்கும்படியாய் நேரிடும். பிள்ளைகளின் வித்தியாபிவிருத்திக்குப் பங்கமுண்டாகும். ஆகையால் இந்த வேலையில் புகுகிறவர்கள் சரீர திடமுள்ளவர்களாயிருப்பதுடன் பின்னும் ஆரோக்கியமாயிருக்கும் பொருட்டு தங்கள் ஆகாரம் நித்திரை தேகப்பயிற்சி இவைகளில் ஜாக்கிரதையுள்ளவர்களா யிருக்கவேண்டும்.

2. அங்கஹீனமின்மை. சிறு பிள்ளைகள் பெரியவர்களின் ரூபத்தைக்கண்டுதான் பயப்படுவதும் மரியாதை செய்வதும். சரீரம் எப்படியிருந்தாலென்ன யோக்கியதையை யறிந்தல்லவா மரியாதை செய்ய வேண்டியதென்பது அவ்வளவாய் அவர்களுக்குத் தெரியாது. சிலர்களுக்கு ஸ்வபாவத்திலேயே சரீரம் நடைமுதலியவை காம்பீரியமாயும் பார்ப்போருக்குப் பயத்தையும் பக்தியையும் உண்டுபண்ணத்தக்கவையாயும் ஏற்பட்டிருக்கும். இந்த பாக்கியம் எல்லாருக்கும் கிடைக்காது. உபாத்தியாயர்கள் எல்லாரும் இப்படி யில்லாமற்போனாலும் அங்கஹீனமற்றவர்களாயாவது இருக்கவேண்டும். ஒரு உபாத்தியாயர் நொண்டியாயிருந்தால் அவரிடத்தில் பிள்ளைகளுக்கு பயமும் பக்தியும் உண்டாவது கஷ்டம். ஏற்கனவே சொல்லியபடி பிறரைப்போல் செய்கிற ஸ்வபாவம் பிள்ளைகளிடத்திலுண்டாதலால் நொண்டி நொண்டி நடக்கும் உபாத்தியாயரைப்பார்த்தால் அவரைப்போலவே யவருக்குப்பின் தாமும் நொண்டிநொண்டி நடப்பார்கள். அது கடைசியில் உபாத்தியாயரைக்கேலி பண்ணுவதில் முடியும் : அவரிடத்தில் மரியாதையும் குறைந்துபோம்.

3. ஸ்பஷ்டமாய்க் கேட்கும்படியான கண்டத்வனி. உபாத்தியாயர் பேச ஆரம்பித்தவுடனே சப்தம் கணீரென்றிருந்து பிள்ளைகளை சந்தடிசெய்யாமல் அடக்கி அவர் சொல்லும் வார்த்தைகளை கவனிக்கச் செய்கிறதாயிருக்கவேண்டும். மிகவும் தாழ்ந்த குரலுடனும் பேசக்கூடாது. அதிக உரத்தி கூச்சல் போட்டுக்கொண்டும் பேசக்கூடாது. வகுப்பிலுள்ள பிள்ளைகளுக்கு எந்தமட்டில் உரத்திப்பேசினால் போதுமோ அந்தவிதமாய்ப் பேசவேண்டியது.

4. கூர்மையான கண்ணும் காதும் உடையவராயிருக்கவேண்டும். வகுப்பில் பாடம் நடக்கும்பொழுது அனாவசியமான சப்தம் கொஞ்சம் கிளம்பினாலும் சரி, அல்லது, பிள்ளைகள் சற்று கவனத்தப்பாய் அங்குமிங்கும் பார்த்தாலும் சரி, அந்த சப்தத்தையும், கவனத்தப்பையும் உடனே யறியக்கூடிய அவ்வளவு கூர்மையான காதும் கண்ணும் உபாத்தியாயர் உடையவராயிருக்கவேண்டும். பாடம் நடக்கும்பொழுதுசொல்லிக்கொடுக்கும் உபாத்தியாயர் குரலோ, அல்லது போட்ட கேள்விக்கு பதில் சொல்லும் பிள்ளைகளுடைய குரலோ—ஒரு குரல்தான் கேட்கப்படவேண்டும். ஒரு பள்ளிக்கூடத்தில் வகுப்புகள் எத்தனையோ அத்தனை குரல்கள்தான் கேட்கப்படவேண்டுமே யொழிய அதற்குமேல் கேட்கப்படக்கூடாது. அதற்கு மேற்பட்டு எந்த சப்தமுண்டானாலும் அது பள்ளிக்கூடத்தில் நடக்கிற வேலைக்குப் பிரதிகூலமாய்த் தானிருக்கும். ஆகையால் அப்படியிருப்பதாய் உடனுக்குடன் தெரிந்துகொண்டு அதை நிவிர்த்திக்க உபாத்தியாயர் முயற்சிசெய்ய வேண்டியது. இல்லாவிடில் பள்ளிக்கூடம் ஒரே கூச்சலாயும் கலவரமாயும் ஆய்விடும்.

5. போதிக்குந் திறமையுடையவர்களாயிருக்கவேண்டும். கல்விமட்டுமிருந்தால் போதாது, கற்பிக்குந் திறமையும் இருக்கவேண்டும். படித்தவர்களில் அநேகர்களுக்கு தங்களுக்குத் தெரிந்தவிஷயங்களைத் தெளிவாய்ப் பிறருக்கு மனதிற் படும்படி சொல்லும் சக்தியிருப்பதில்லை. சிலர் பேசவாயெடுத்தால் கேட்கவொண்ணாது. மற்றும் சிலர் நாள் முழுமையும் பேசினாலும் கேட்க சகிக்காது. இந்த மாதிரி போதிக்கும் திறமை ஸ்வபாவத்திலேயே யிருப்பது சிரேஷ்டம்.

அப்படியில்லாதவர்கள் கூட சிரமப்பட்டு அந்தத் திறமையைத் தங்களிடத்தில் ஏற்படுத்திக்கொள்ளலாம். அனுபவத்தினாலும் இந்தத் திறமையேற்படும். ஆனால் அனுபவம் சித்திப்பதற்குமுன் எத்தனையோ தப்புகள் செய்யும்படி நேரிடும். அதுவரையில் அவரிடத்து வந்துபோன பிள்ளைகளுக்கு வித்யா நஷ்டமுண்டாகும். அதனால்தான்' போதிக்கும் முறைகளைக் கற்பிக்கும் பாடசாலைகளையேற்படுத்தி அதில் படித்துத் தேர்ந்தவர்களையே உபாத்தியாயர்களாக ஏற்படுத்திவருகிறார்கள்.

6. தான் கற்பிக்கப்புகும் விஷயத்தில் பூர்ண ஞானமுடையவரா யிருக்கவேண்டியது. ஒரு விஷயத்தை நாம் பிறருக்குக் கற்பிக்க வேண்டுமேயானால் அதை நாம் முன்னடி நன்றாய் அறிந்துகொண்டிருக்க வேண்டும். தம்மைப் பார்க்கிலும் அதிகமடங்கு படிப்பும் ஞானமும் உபாத்தியாயரிடத்தில் உண்டென்ற வெண்ணம் பிள்ளைகளுக்கு உண்டானால்தான் அந்த உபாத்தியாயரிடத்தில் அவர்களுக்கு பயமும் பக்தியும் தோன்றும். "பிள்ளைகளைப் பார்க்கிலும் எனக்கு பிரபஞ்சஞான மதிகமாகையால் எனக்குமுந்தி தெரியாத அம்சமானாலும் அன்றன்றைக்கு வேண்டியதை அப்போதைக்கப்போது படித்துப் பிள்ளைகளுக்கு சொல்லிக்கொடுக்க என்னால் முடியாதா" என்று சிலர் நினைக்கலாம். இது தப்பெண்ணம். நாம் படித்துக்கொண்டே போகும் பொழுது எல்லாம் சுலபமாய் தெரிந்துவிட்டாற்போலத் தான் தோன்றும். பிறருக்கு எடுத்துச் சொல்லப் புகுந்தாலோ முன் நமக்குத் தோன்றாத சந்தேகங்கள் தோன்றும். நமக்கே தெளிவாய்த் தெரியாத விஷயத்தைப் பற்றிப் பிள்ளைகளுக்கு நாம் கற்பிக்கும் பொழுது நாம் எதிர்பார்த்திராத கடினங்கள் பிள்ளைகளுக்குத்தோன்றி உபாத்தியாயரிடம் சந்தேகந்தெரிந்துகொள்ள அவர்கள் கேள்விகள் போடலாம். அந்த சமயத்தில் அவர் விழிக்கும்படியாய்த்தான்வரும். இப்படி சம்பவித்தலால் உபாத்தியாயருக்கு அவமானம்நேரிட்டு ஏற்கனவே அவரிடத்தில் பிள்ளைகள் வைத்திருந்த கௌரவம் குறைந்துபோகும்.

மேல்மேல் படித்து தன் ஞானத்தை விருத்தி செய்ய வேண்டுமென்ற ஆவல் கொண்டவரா யிருக்கவேண்டும். இது முன்சொல்லிய இலக்ஷணத்துக் கவசியமானது. புதுவிஷயங்களைத் தெரிந்துகொண்டேயிருந்தால் அதனால் உபாத்தியாயருக்கு புத்தி அதிகத் தெளிவுண்டாகி பிள்ளைகளுக்கு கற்பிக்குந் திறமையில் விருத்தியடைவார்.

7. உபாத்தியாயருக்கும் பிள்ளைகளுக்கும் ஒற்றுமை யிருக்கவேண்டும். அதாவது உபாத்தியாயர் எவ்வளவு பெரிய படிப்புள்ளவரா யிருந்தாலும் பிள்ளைகளுக்குக் கற்பிக்கும் பொழுது தன்னையும் அவர்களில் ஒருவராய் பாவித்துக்கொண்டால்தான் பிள்ளைகளுக்கு எந்த விடங்களில் சந்தேகம் தோன்றுமோ அவைகளைத்தெரிந்து தகுந்தபடி போதிப்பார். தமக்கு ஒரு விஷயம் நன்றாய்த் தெரிந்ததையிட்டு பிள்ளைகளுக்குக்கூட அது சுலபமாய் மனதில் படுமென்ற எண்ணத்துடன் அலக்ஷியமாய் உபாத்தியாயர் போதிக்கத் தொடங்கினால் அது பயன்படாது.

8. தன் வேலையில் சிரத்தை. எந்தத் தொழிலானாலும் சரி, அதில் புகுகிறவர்கள் சிரத்தையுடன் உழைத்து நல்லபெயர் அடையவேண்டுமென்று உத்ஸாகத்துடன் வேலை செய்து வரவேண்டியது. இது நியாயமாயிருக்க, உபாத்தியாயர் வேலைக்கு வருகிறவர்களில் அனேகருடைய உத்தேசம் மட்டும் வேறாகவேயிருக்கிறது. சிலர் அனேக இடங்களில் வேலைக்குப் பிரயத்தினம்செய்து உடனே கிடைக்காமல் தாத்காலம் ஜீவனோபாயத்துக்கு ஒரு வழி வேண்டுமே யென்று ஏதாவது ஒரு பள்ளிக்கூடத்தில் கிடைத்த சம்பளத்துக்கு உபாத்தியாயராக அமர்ந்து, தினந்தோறும் வேறு வேலைக்கு மனுக்கொடுத்தும், பெரிய உத்யோகஸ்தர்களைப்பார்த்து அநுசரித்தும் தாங்கள் ஒப்புக்கொண்ட உபாத்தியாயர் வேலையை சரியாய் செய்ய தகுந்த அவகாச

மற்றவர்களாயிருக்கிறார்கள். "நாம் இதை விட்டுவிடப்போகிறது இன்றைக்கோ நாளைக்கோ; அதற்குள் நாமேன் வீண் சிரமப்பட வேண்டும்" என்று வேலையில் கவலையற்றவர்களாயிருப்பார்கள். வேறு சிலர் "நான் என்ன இந்த வேலையில் சாசுவதமாயிருக்கப் போகிறேனே. ஏதோ இரண்டு வருஷகாலமிருந்து கொஞ்சம் பணம் சேர்த்துக்கொண்டு "லா கிளாஸ்" (Law Class) சேர்ந்து படிக்கப் போகிறேன்" என்று சொல்பவர்களாயிருக்கிறார்கள். இவர்கள் இந்த வேலையில் நிலையாயிருக்கிறதில்லையென்ற நிச்சயத்துடன் பிரவேசிக்கிறபடியால் அவர்களுக்கு வேலையில் சிரத்தையிராது; ஆகையால் அவர்கள் செய்யும் வேலை பயன்படாது. இன்னும் சிலர்கதி இந்த வேலையிலேயேயிருந்து வாழ்நாள் முழுவதும் கழித்துத் தீரவேண்டியதாயிருந்தாலும் உத்ஸாகமற்றவர்களாய் தங்கள் சம்பளமே பிரதானமாயும் பிள்ளைகளின் அபிவிருத்தி அலக்ஷியமாயுங்கொண்டு மணியடித்தபின் பள்ளிக்கூடத்துக்கு வருவதும், மணியடிக்கு முன் வீட்டுக்குத் திரும்பிப்போக சித்தமாயிருப்பதும், லீவு நாள்கள், முதல் தேதி யெப்பொழுது வரப்போகிறதென்று மிக்க ஆவலுடன் எதிர்பார்த்துக்கொண்டிருப்பதும் இவர்களுக்கு சுபாவம். தாங்கள் செய்யும் வேலையைப்பற்றி யாரிடத்திலாவது பிரஸ்தாபம் வந்தால் 'ஆமா! இங்கே கொடுக்கிற சம்பளத்துக்கு நான்செய்கிறவேலை போதாதா' என்று இவர்கள் சொல்வார்கள்—இவ்விதமான அபிப்பிராயங்களை யுடையவர்கள் நம்முடைய பாடசாலைகளில் அனேகரிருக்கிறார்கள். அவர்களெல்லாரையும் களை பிடுங்குவதுபோல சுத்தமாய் நீக்கி இந்த வேலையில் உத்ஸாகத்துடன் உழைத்து கீர்த்திபெற வேண்டுமென்று எண்ணங்கொண்டவர்களை மாத்திரந்தான் இந்த வேலைக்கு நியமிக்கவேண்டும்.

9. பிள்ளைகளை யடக்கியாளும் திறமை. இது சிலருக்கு ஸ்வபாவத்திலேயேயிருக்கும். சில உபாத்தியாயர்கள் வகுப்பண்டை வரும்பொழுதே பிள்ளைகள் அவரவர்களிடத்திலுட்கார்ந்து கிச்சென்ற சப்தங்கூட வில்லாமல் அமரிக்கையா யிருப்பார்கள். இன்னும் சில உபாத்தியாயர்கள் வகுப்பில் வந்துட்கார்ந்தும், இவர் வந்ததைப் பிள்ளைகள் சற்றேனும் கவனியாமல் அவரவர்கள் தங்கள் காரியத்திலிருப்பதையிட்டு "சரியாயுட்காரு" "புஸ்தகங்களை மூடு" "நீ பெஞ்சிமேல் நில்லு" என்று சரமாரியாய் அடுத்தடுத்து தண்டனைகள் விதித்துக்கொண்டிருந்தபோதிலும் லக்ஷியம் செய்யாமல் அவரையே யெதிர்த்துப் பேசுவதும் உண்டு. முதலில் வந்தவரிடத்தில் அவ்வளவடக்கத்துடனிருந்தவர்கள் இவரைக்கண்ட மாத்திரத்தில் இப்படி மாறுவதேன்? இவர் பாபம் இது; அவர் செய்த பாக்கியம் அது. புதிதாய் யாராவது பள்ளிக்கூடம் நடக்கும் மாதிரியைப் பார்க்கவந்தால் இதென்ன ஆச்சரியம்! முதலில்வந்த உபாத்தியாயர் வாயை யசைத்து ஒருகடுமொழியுஞ் சொல்லாமல் சும்மா இருக்கும்பொழுதே அவரிடத்தில் அவ்வளவு அடங்கியிருந்த இதே பிள்ளைகள் இந்த உபாத்தியாயர் இத்தனை சிரமப்பட்டும் அவரை இவ்வளவு பாடுபடுத்திவைக்கிறார்களே யென்று வியக்கும்படியிருக்கும். இதற்கெல்லாம் காரணமென்ன. முதலில் வந்தவரிடத்தில் பிள்ளைகளுக்குபயமும் பக்தியுமுண்டு. இவரிடத்தில் அதில்லை. உபாத்தியாயருக்கு பெருத்த யோக்கியதையுண்டென்று பிள்ளைகளறிந்தால்தான் அவரிடத்தில் மரியாதையாயிருப்பார்கள். யோக்கியதையிருப்பதுடன் உபாத்தியாயருக்கு மனோதிடமிருக்கவேண்டும். இத்தனை பிள்ளைகளையும் நான் என்னமாயடக்கி யாளப்போகிறேன் என்று அதைரியம் வந்தால் உடனே யவர் வேலையை விட்டுவிட வேண்டியதுதான். தன்னிடத்திலேயே தனக்கு நம்பிக்கையில்லாமற்போனால் மேலே யொருகாரியமும் முடியாது. இதற்கு திருஷ்டாந்தம்:— ஒரு பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயர் வேலை காலிவிழுந்தது. அதற்கு அனேகர் மனுக்

கொடுத்ததில் அந்தப் பள்ளிக்கூடத்ததிகாரி ஒருவரைத் தேர்ந்தெடுத்து அவரைப் பள்ளிக்கூடத்திற் கொண்டுபோய் விட்டு விட்டுத் திரும்பினர். பிள்ளைகள் புது உபாத்தியாயரைத் தனியாய்க் கண்டவுடன் இவர் திறமை யெந்தமட்டிலிருக்கிற தென்பதை யறிய உத்தேசங்கொண்டவர்களாய் தங்கள் கால்களால் பூமியில் சப்தஞ் செய்யத் தலைப் பட்டார்கள். சற்று உபாத்தியாயர் சும்மா யிருந்திருப்பாரேயானல் இன்னும் மேல் நடவடிக்கைகள் பிள்ளைகள் நடத்தியிருப் பார்கள். ஆனல் அவர்கள் சப்தஞ்செய்ய ஆரம்பித்தவுடனே உபாத்தியாயர் "பிள்ளைகளே அமரிக்கை" யென்று திட்டமாய்ச் சொல்லவே அந்த காம்பீரியக் குரலைக்கேட்டு அவரவர்கள் நடுங்கியொடுங்கி இவரிடத்தில் நம்மாட்டம் பலிக்காதென்று தெரிந்துகொண்டு அடங்கிவிட்டார்களாம். "உபாத்தியாயர் சொன்னல் சொன்னதுதான் : செய்தால் செய்ததுதான். அவர் நிச்சய புத்தியும் மனேதிடமும் உடையவர்" என்ற வெண்ணம் பிள்ளைகளுக்குண்டாகவேண்டும்.

10. சாமர்த்தியம். சமயோசிதமாய் நடந்து கொள்ளக்கூடிய யுக்தியும் புத்தியும் உபாத்தியாயரிடத்திலிருக்கவேண்டும். இதின் அர்த்தத்தை ஒரு உதாரணத்தினல்தான் விளக்கிக் காட்ட முடியும். உபாத்தியாயர் கருப்புப் பலகையில் எழுதத்திரும்பினதும் வகுப்பில் ஒரு பையன் சிரிக்கிறதாக வைத்துக்கொள்ளுவோம். யாரோ ஒருவன் சிரித்தானென்று மட்டும் தெரிகிறதே யொழிய இன்னனென்று குறிப்பாய்த் தெரியவில்லை. உபாத்தியாயர் சமயோசித சாமர்த்தியமற்றவராயிருந்தால் உடனே கோபங்கொண்டு, எழுதுவதை நிறுத்தி, சிரித்தது யாரென்று கடுமையாய் விசாரிக்கப் புகுவார். உபாத்தியாயர் வகுப்பு முகமாய்த் திரும்பினதும் சிரித்தவனுள்பட எல்லாப் பிள்ளைகளும் சர்வ சாந்தகுணமுடையவர்களைப்போலக் காணப்படுவார்கள். உபாத்தியாயர் சிரித்தது யாரென்று கேட்ட கேள்விக்கு தெரியாததினலோ அல்லது பயத்தினலோ மறுமொழி யொருவரும் சொல்லமாட்டார்கள். விசாரணையை யாரம்பித்துவிட்டோமே ஏதோ ஒருவிதமாய் முடித்தால்தான் நமக்கு கௌரவம் தக்கும் என்ற தப்பெண்ணத்தால் "ஒருவரும் சொல்லமாட்டீர்களல்லவா! நான் உங்களைத் தகுந்தபடி நடத்துகிறேன்" என்று சொல்லிக்கொண்டே எல்லாப்பிள்ளைகளையும் ஒரே சீராய்த் தண்டித்துவிடுவார். இப்படிச் செய்வதினல் தப்புச் செய்தவர் இன்னர் செய்யாதவர் இன்னர் என்று தெரிந்துகொள்ள உபாத்தியாயருக்கு சக்தியில்லையென்றும் நம்மையுஞ்சேர்த்து அநியாயமாய் தண்டித்தாரேயென்றும் பிள்ளைகளில் தப்புசெய்யாதவர்களுக்குத் தோன்றும். தப்புசெய்தவனுக்கு உபாத்தியாயரை ஏய்த்துவிட்டோமென்ற ஒரு எண்ணமும் தன்னை தண்டித்தபடியே பிறரையும் தண்டித்தபடியால் தான் தாழ்ந்துபோனது ஒன்றுமில்லையென்றும் தோன்றும். அதாவது நல்ல பிள்ளைகள், கெட்டபிள்ளைகள் யாவருக்கும் உபாத்தியாயருக்கு யோக்கியதை யில்லையென்றும் அவரை எளிதில் ஏய்த்துப்போடலாமென்றும் எண்ணமிடமுண்டாகும். அதனல் அவரிடம் ஏற்கனவேயிருந்த கௌரவம் குறைந்துவிடும். சாமர்த்திய மற்றவர் பாடு இது உபாத்தியாயர் சமயம்போல் நடந்துகொள்ளத் தெரிந்தவராயிருந்தால் தனக்கு சிரித்தது இன்னனென்று நிச்சயமாய்த் தெரியாததினல், பையன் சிரித்த சங்கதியே தன் காதில் படாததுபோல் மேல்காரியங்களை நடத்தி வகுப்பின்பேரிலேயே கண்ணுயிருந்து, தான் பண்ணின விஷயத்தை உபாத்தியாயர் தெரிந்துகொள்ளவில்லை யென்பதைப்பற்றி குற்றவாளி மற்றப் பிள்ளைகளுடன் கண்ஜாடையினல் செய்யும் சம்பாஷணையிலிருந்து சிரித்தது இன்னன்தானென்று தெரிந்துகொண்டு அவனைமட்டும் தகுந்தபடி தண்டிப்பார். அப்படி செய்பவரைக் கண்டால் இவர் உண்மையை யெப்படியோ அறிந்துகொள்ளக்கூடிய யுக்தி

சாலியென்றும், இவரிடத்தில் தாம் அடங்கி அமரிக்கையாய்த்தானிருக்கவேண்டுமென்றும் பிள்ளைகளுக்குத் தோன்றும்.

11. பொறுமை. நாம் முன்சொல்லியபடி உபாத்தியாயர்வேலை கடினமானது. மேலும் படிக்கவரும் பிள்ளைகளில் மந்தபுத்தியுள்ளவர்கள் அதிகமாயிருப்பார்கள். சில சமயங்களில் எத்தனை தடவை ஒரே சங்கதியைப் பற்றி உபாத்தியாயர் கரடியாகக் கத்திச்சொன்னாலும் அவர்கள்மனதில்படாது. அப்பொழுதுகூட அவர்கள்பேரில் சற்றேனும் கோபங்கொள்ளாமல் நன்றாய் விளக்கிக்காட்டாத குற்றம் தன்னுடையதென்று நினைத்து மறுபடியும் சொல்லமுயலவேண்டும். ஆதலால் உபாத்தியாயர் விடாமுயற்சி செய்கிறவராயும் பொறுமையுள்ளவராயு மிருக்கவேண்டும்.

12. பக்ஷபாதமின்மை. இது நியாயம் இது அநியாயமென்பது பிள்ளைகளுக்கு நன்றாய்த் தெரியும். சில பிள்ளைகளை யொருமாதிரியாயும் மற்றும் சிலரை வேறு மாதிரியாயும் நடத்தினால் அவரிடத்தில் பிள்ளைகளுக்கு நம்பிக்கை யிராது.

13. சத்யம் தவறாமை. உபாத்தியாயர் தான் சொல்லும் ஒவ்வொரு வார்த்தையிலும் செய்யும் ஒவ்வொரு காரியத்திலும் சத்தியத்தை மேலாகக்கொண்டவராயிருக்க வேண்டும். உபாத்தியாயர் சத்தியம் தவறுதவராயிருந்தால் பிள்ளைகளுக்கும் அதே நன்னடவடிக்கை படியும்.

14. பிள்ளைகளின் நன்மையை உத்தேசித்து உபாத்தியாயர் தன்னிடத்துள்ள துரப்பியாசங்களையெல்லாம் நீக்கி, நாள் தப்பாமல் குறிப்பிட்ட மணிக்குப் பள்ளிக்கூடத்துக்கு வருதல், சரீரத்திலும் உடுப்பிலும் பரிசுத்தமாயிருத்தல் முதலிய நல்ல வழக்கங்களை பிள்ளைகளும் அநுசரிக்கும்படி அப்பியசித்து வரவேண்டியது.

## PROVERS AS AIDS TO CHILD-STUDY.

## பாலபோத சாதனம் : பழமொழி விளக்கம்.

நமது தர்மசாஸ்திரங்கள் எப்படி உற்பத்தியாயின? திடீர் என்று எடுத்ததும் தர்மசாஸ்திரங்களாக வந்து நிற்கவில்லை. எவ்வளவோ அபிமானத்தில் பிரஹ்மாவே சொல்லி அவருடைய பிள்ளையாகிய மனு என்பவர் மானவதர்ம சாஸ்திரம் எழுதினார் என்று நாம் ஒருவாறு ஒவ்வொரு ஸமயத்தில் சொல்லிக்கொண்டிருந்தபோதிலும் சரித்திரக்கண்ணாலும், ரோமாபுரி, யவன தேசம் முதலிய இடங்களில் அங்கங்குள்ளோர்களுக்கு ஏற்பட்டிருக்கும் தர்மசாஸ்திரங்களின் சர்ச்சையாலும் நாம் பரிசோதித்துப்பார்த்தால் அநேக பழயவழக்கங்கள் ஒவ்வொரு நாட்டிலிருந்ததாகவும், அந்த வழக்கங்கள்,—எந்த வழக்கங்களை நாம் மாமூல் என்று ஒவ்வொரு சமயத்தில் சொல்லுகிறோமோ அந்த வழக்கங்கள்—தர்மசாஸ்திரங்கள் ஏற்படும் முன்ன மிருந்திருப்பதாகவுந் தெரியவருகிறது. இவ்வித வழக்கங்கள் அதிகப்படவே, இனி ஓர்வித ஏற்பாடில்லாவிட்டால் இந்த வழக்கங்கள் எண்ணிலடங்காதென்ற சமுசயம் வந்தது. அவ்வித சமுசயம் வந்தபோது தான் ஸ்மிருதிகள் ஏற்படும்படி நேரிட்டன.

இவ்வளவுதூரம் நாம் இங்கு ஸ்மிருதிகளையும் தர்மசாஸ்திரங்களையும்பற்றி சொல்லியதற்குக் காரணம் நாமிப்போது ஆரம்பிக்கும் "பழமொழிகள்" என்பவை இம்மாதிரி வந்த ஸ்மிருதிகளுக்கு முன்னமே, எவைகள் ஸ்மிருதிகளுக்குத் தாயாகவிருந்து வழக்கங்கள் என்று பெயர் பெற்றனவோ அவைகளிலிருந்து, உண்டானவைகள். பழமொழி என்றால் பழய காலத்துச்சொல்; அந்தச்சொல்லை தத்காலம் நாம் வெகு அருத்தத்துடன் பிரயோகப்படுத்துகிறோம். ஒரு நாழிகை செய்ய வேண்டிய ஸம்பாஷணையை ஒரு நொடியில்

சிறு பழமொழி ஒன்றைச்சொல்லி ஸரியாய்க் காட்டிவிடுகிறோம்.

மேலும் ஜனங்களுடைய அந்தர்கதமான பாவங்களை ஒருவனறிய விரும்பினால் அவர்களுடைய பழமொழிகளை நன்றாய்க் கற்றறிய வேண்டும். பழமொழிகள்தான் அவர்களுடைய சரித்திரம், மதம் முதலிய ரஹஸ்ய சங்கதிகளை ஒருவாறு பயிரங்கப்படுத்துகிறவைகள். இவைகள்தான், எந்த பாஷையை அவைகள் அனுசரித்திருக்கின்றனவோ, அந்த பாஷையின் யதார்த்த ரூபத்தை வெளிப்படுத்தும் ஆதாரங்கள். சில சரித்திர கிருந்தகர்த்தாக்கள் பல ஜனங்களுடைய பழமொழிகளை ஒன்றுசேர்த்து ஒப்பிட்டுப் பார்த்தால் ஆசியா கண்டத்தின் மத்தியபாகத்திலிருந்து ஜனங்கள் பிரிந்துபோய் உத்திரதக்ஷிண பூர்வபச்சிம பாகங்களில் குடி ஏறினகாலமும் அவர்களந்த சமயத்தி லடைந்திருந்த நாகரீகம் முதலியவைகளும் ஒருவாறு ஒப்பிட ஆதாரங்களுண்டாகும் என்ற அபிப்பிராயங்கொண்டிருக்கிறார்கள். அது யதார்த்தமே.

கர்னடக பாத்திரங்கள், கர்னடக கட்டிடங்கள், கர்னடக சம்பிரதாயங்கள் என்ற அசிலாக்யத்தால் பலவானவைகள் இப்போது மடிந்துபோகிறமாதிரி நமது தேசத்து பழமொழிகளும் அவைகளின் அருமையறியாத நாகரீகங்கள் என்னும் வலையில் சிக்கி மடிந்துகொண்டு வருகின்றன. ஆகையால் இவைகளை சீக்கிரத்தில் ஒன்றுசேர்த்து ஜனங்கள் இவைகளை யிகழாமலிருக்கும்படி பயிரங்கப்படுத்துவது அத்யாவசியமாக விருக்கிறது.

இவ்வளவு பாவகருப்பமாயிருக்கும் பழமொழி எப்போது உண்டானது; யாராலியற்றப்பட்டது; என்று கேட்டால் சொல்லத் தெரியாது. அவ்வித கேள்விகளுக்கு விடை ஒன்றேதான். ஜனங்கள்தான் பழமொழியை உண்டாக்கினார்கள்; அவர்கள் சொத்துத்தான் அது; எல்லாருடைய ஸமுதாய சொத்தாகவுமிருக்கிறது. இந்த 'எல்லா ஜனங்களுடைய சமுதாய சொத்தான' பழமொழியைப் பாதுகாத்தல் அவசியம். பழமொழியிலவ்வளவுசிரத்தை ஏன் என்று கேட்டால், பழமொழிதான் ஒவ்வொரு ஜனங்களுடைய ஸரியான பேச்சு, புத்தி, யுக்தி, சக்தி, மதம், தைர்யம், கோட்பாடு, கொள்கை முதலியவைகளை வெளியிடுபவைகள். இவ்வளவு சக்தியுள்ள இந்த பழமொழியோ இன்னாரிடந்தானிருக்கின்றது; இன்ன புஸ்தகமூலமாய்த்தான் கற்றுக்கொள்ளவேண்டும் என்றில்லாமல் எல்லாரிடமும் கொஞ்சங்கொஞ்சம், அவர்கள் பதவியோ, வித்தையோ இவைகளை யனுஸரித்து விளங்கி வருகிறது.

“முற்றுங் கற்றவரில்லை முழுவதூஉம் கற்றனமென்று களியற்க” என்னும் சித்தாந்தம் ஒருக்காலிந்தப் பழமொழி வித்தைக்குத்தான் முக்கியமாக ஏற்பட்டதோ என்று சந்தேகிக்கும்படியாக, பெரிய வித்வான்கூட அவன் வீட்டு தயிர்க்காரியிடம் பேச்சிலறிந்துகொண்ட பழமொழிகளிருக்கின்றன. ஆகையால் பழமொழிகளை முற்றிலும் கற்றவர்கள் ஒருவருமில்லை. நமக்கு 4-தெரிந்திருக்கலாம், நமது வீட்டு மாட்டுக்காரனுக்கும் நமக்குத் தெரியாத பழமொழிகள் 4-தெரிந்திருக்கலாம்; இவைகளையெல்லாம், எங்கெந்த சமயத்தில் யார் யார் வாயிலிருந்து வருமோ அப்போதப்போது எடுத்து நாம் ஏற்படுத்திய அட்டவணையைக்கொண்டு பார்த்தால் நமது தமிழில் சற்றேறக்குறைய 10,000 பழமொழிகளுக்குக் குறையாமல் இருக்கலாம் என்று தோன்றுகிறது. சிலர் ஔவை முதலிய கவிகளுடைய “தந்தைதாய்ப்பேண்” “இளமையிற்கல்” என்னும் மூதுரைகளையும் பழமொழியாய்ச் சேர்த்து கணக்கை அதிகரிக்கிறார்கள். இவைகள் பழமொழிகளாகமாட்டா. ஏனெனில் இவைபோன்றவைகள் ஜனங்கள் பேச்சாக விராமல் ஒரு கவியினுடைய சொல்லாகவிருக்கிறது; நாம் நமது பழமொழிகளில் ஜனங்கள் சொல்லாய் வழங்கிவருகிறவைகளை யல்லாது மற்றவைகளைப் பழமொழிகளாக ஒப்புக்கொள்ளவில்லை. பழமொழிகளின் அருத்தத்தை

உள்ளது உள்ளபடி சொல்லி அவைகளைச் சேர்ந்த கதைகள், பிரயோகங்களின் வித்யாஸம் முதலியவைகள் ஏதேனுமிருப்பினும் அவைகளையும் எடுத்துச்சொல்லக் கேட்டுணர வேண்டியதவசியம்.

அன்றியும் இவ்வித பழமொழிகள் பதினுயிரத்தையும், அகரமுதல் வௌகாரம்வரையும் எழுத்துவாரியாய்க் கொடுப்பதினுல் அதிக பிரயோஜன மிருக்கமாட்டாது என்று எண்ணி ஒவ்வொரு விஷயத்தின் கீழும் வரும் பழமொழிகளை எடுத்தெழுத உத்தேசித்திருக்கிறோம். அகரத்தில் அகதி, ஏழமை இவைகளைப் பற்றிய பழமொழிகள் முதல் முதல் ஆரம்பிக்கிறபடியால் இவைகளை முதலில் எடுத்துச் சொல்லுகின்றோம். அகரமுதலாய்வரும் அட்டவணையில் "அகங்கையிற்போட்டு புறங்கையை நக்கலாமா" என்னும் பழமொழியைக்கொண்டு எல்லா புஸ்தகங்களும் ஆரம்பிக்கிறபடியால் அதையும் விடாமல் முதலில் கொடுத்திருக்கிறோம். அப்புறம் ஏழமை என்னும் விஷயத்தின் கீழ்வரும் பழமொழிகளை ஒருவாறு சொல்லி முடித்து பிறகு விஷயங்களின் பிரகாரம், விவசாயம், கோபம், வியாபாரம், பொறுமை, பணம், நாகரீகம்; மதம் முதலிய ஒவ்வொரு விஷபத்தையும் எடுத்துக்கொண்டு அததன்கீழ்வரும் பழமொழிகளை நம்மால் கூடியமட்டும் சம்பூர்ணமாகக் கேட்டெழுத முயலுவோம்.

பழமொழிகள்.

(1) அகங்கையிற் போட்டு புறங்கையை நக்கலாமா.

அகங்கை என்ருல் உள்ளங்கை. உள்ளங்கையில் ஏதோ ஒரு திரவபதார்த்தை—நெய்யை அல்லது தேனை—போட்டு=வைத்து, புறங்கையை=வெளிப்பக்கத்துக் கையை ; நக்கினுல், உள்ளங்கையில் போட்டதேனே நெய்யோ எப்படி வாயில் வரும் என்றபடி. இந்தப் பழமொழி எப்போது உபயோகப்படுத்தப்படுகிறது என்ருல், நாம் ஒருவனுக்கு உபகாரஞ்செய்துவிட்டு உபகாரஞ்செய்யாத மற்ருெருவனிடமிருந்து நாம் கஷ்டப்படுங் காலத்தில் ஏதாவது ஒருவித சகாயத்தை எதிர் பார்க்கும்போது அல்லது ஒருவிதமாக பிரயத்தனம் பண்ணி மற்ருெரு விதமாக லாபம் எதிர் பார்க்கும்போது.

ஏழமை.

(2) அகதிக்கு ஆகாயந்துணை.

(3) அகதிக்கு தெய்வமேதுணை.

அகதி என்ருல்=போக்கற்றவன். அதாவது அத்தியந்த தரித்திரன். அவன் பங்கில் யாரிருப்பார்கள்? ஒருவருமிருக்கமாட்டார்கள்; ஆகாசம் அல்லது தெய்வந்தான் அவனுக்குத் துணை.

ஏழைகளுக்கு தெய்வத்தைத் தவிர வேருெருவித சகாயமும் கிடையாது என்றபடி. இந்த உலகம் எப்போதும் பணத்தையே அநுசரித்ததாக விருக்கிறபடியால் எவனிடம் பணமிருக்குமோ அவனைத்தான் தொடரும். "ஸர்வே குணு:காஞ்சனம்* ஆச்ரயந்தே" என்றும், எல்லாகுணங்களும் பணமிருக்கிறவனுக்குத் தான், அவனிடம் என்னதோஷமிருந்தாலும் அதை மறைத்து குணமாக லோகம் புகழும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. அகதிக்கோ ஒருவித துணையும் கிடையாது. ஆகாசமும் தெய்வமுந்தான். மற்றவர்கள் செய்தகுற்றங்கள் அகதி தலையில் விடியும். அப்படி வருகிற காலத்தில் அகதிபங்கில் யாரிருந்து சாட்சி சொல்லுவார்கள். ஒருவரும் அவனை ஒப்புக் கொள்ளமாட்டார்கள். ஆகாசமும் தெய்வமுந்தான் அவனுக்குத் துணை என்றபடி.

(4) அகதிசொல் அம்பலமேறாது.

அகதி ஏதாவது தன் ஒரு விஷயத்தைப் பற்றிச் சொன்னுல் அதை யார் காதுகொடுத்துக் கேட்பார்கள். ஏழமை என்பது 6-வது பாதகத்திற்கு ஒப்பானதாகையால் அவனை ஒருவரும் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். அம்பலம் என்ருல் சபை. அவன் சொல்லை சாதா

* காஞ்சனம்=தங்கம்=தங்கத்தை.
ஆச்ரயந்தே=தொடருகின்றன.

ரண ஜனங்களே—அவன் பெண்சாதி, பிள்ளைகளே கேட்கமாட்டார்களே: அது ராஜசபையில் என்னமாக ஏறும் என்றபடி.

(5) அகதி தலையில் பொழுது விடிந்தது.

இதனுடைய அருத்தம் வெகு விசித்திரம். இதை விவரிக்கும் முன்னதாக நாம் சொல்ல வேண்டியவைகள் சிலவுண்டு. காலையில் நாம் படுக்கையைவிட்டு எழுந்திருக்கும்பொழுது எந்த முகத்தைப் பார்க்கிறோமோ அதற்குத் தகுந்தபடி அந்த நாள் நமக்கு இருக்கும் என்பது ஹிந்துக்களின் கொள்கை. சில ஜனங்கள் நல்லவர்கள் என்றும் அவர்கள் முகத்தில் விழித்தால் ஒன்றும் குறைவுவராது என்றும் சொல்வதையும், அதே மாதிரி சிலர் பொல்லாதவர்கள் என்றும் அவர்கள் முகத்தைப் பார்த்தால் அன்றையப்பொழுது நல்ல பொழுதாகப் போகவேண்டுமேயென்ற பயம் ஜனங்களுக்கு உண்டாவதையும் நாம் கேட்டும் பார்த்துமிருக்கக்கூடும். "இன்றைய தினத்தில் யார் முகத்தில் விழித்தேனோ தெரியவில்லை: என் கதி இப்படியாக முடிந்தது" என்று சிலர் புலம்புவதையும் நாம் கண்டிருக்கலாம். இதற்காகவே சிலர் தூங்கப்போகும் முன்னம் தங்கள் தலைக்கு நேராக நல்ல படங்கள் கண்ணாடி முதலியவைகளை வைத்திருப்பதுண்டு. காலையில் அவைகளின் பக்கம் திரும்பிக்கொண்டு கண்ணைவிழித்துக் கொள்வார்கள். மலையாளதேசத்தில் இம்மாதிரி பிராதக்காலத்தில் நல்ல வஸ்துக்களைப் பார்க்கவேண்டும் என்ற கொள்கையானது வெகு பிரபலமாய் வருஷப்பிறப்பின்போது நடப்பது அந்த நாட்டில் கொஞ்சகாலம் வசித்தவர்களுக்குத் தெரியும். அவ்விடத்திய வருஷப்பிறப்பிற்கு விஷுக்கணி என்று பெயர். விஷு என்றால் வருஷம். வருஷத்தின் பிறப்பு. அதாவது நவீன வருஷத்தின் ஆரம்பம். கணி என்றால் பார்வை. ஆகவே "விஷுக்கணி" என்றால் புது வருஷத்தின் பார்வை என்று அருத்தமாகும். இந்த தினத்தில் அவ்விடத்தில் என்ன நடக்கிறது என்பதை சற்று விசாரிப்போம். வருஷப்பிறப்பிற்கு முதல்நாள் சாயந்திரம் ஒவ்வொரு வீட்டிலும், அங்கங்குள்ள முக்கியமான ஆபரணங்கள், கண்ணாடிகள், பலவகைப்பழங்கள் கொன்னை முதலிய புஷ்பங்கள் இவைகளெல்லாம் சேகரிக்கப்பட்டு அந்த வீட்டுப் பூஜை அறையில்வைக்கப்படும். சகலவிதமான காசுகள், தங்கக்காசு, வெள்ளிக்காசு முதலியவைகள் குவியல் குவியலாய் வைக்கப்பட்டிருக்கும், நன்றாய் பழுத்தவும் ஒருவித கோணலும் ஊனமுமில்லாதவுமான பரங்கிக்காய் பூசணிக்காய் முதலிய காய்வர்க்கங்களும் அவ்விடம் கொண்டுவரப்படும்; நன்றாய் முத்தின தேங்காய்கள் 2-மூடிகளாக குறைவு ஒன்றுமில்லாமலுடைக்கப்பட்டு வைக்கப்பட்டிருக்கும்; அகப்படக்கூடிய சகலவித கனிவர்க்கங்களும் நிறைந்திருக்கும். அந்தந்த குடும்பத்துக்குத் தலைவனான காரணவன் என்பவன் வருஷப்பிறப்பாகிய விஷுவன்றைய தினம் அதிகாலையில் 4-மணிக்கு எழுந்திருந்து பூஜைமனையைத் திறந்து கையில் தீபம் ஏந்தி அவ்விடம் வைக்கப்பட்டிருக்கிற பணம், காசு, நகை முதலிய எல்லாவற்றையும் தீபாராதனை செய்து வணங்குவான். அப்புறம் அந்த வீட்டிலுள்ள ஒவ்வொரு ஜனங்களும் ஒருவர்பின் ஒருவராக தங்கள் கண்ணை மூடிக்கொண்டு அந்த அறைக்குட்சென்று கண்ணைத்திறந்து காசுக்குவியல்கள், கனிவர்க்கங்கள் முதலியவைகளை முதல் முதலில் பார்ப்பார்கள். அப்படி முதல் முதலில் கண்ணைவிழித்தபிறகு காரணவன் ஒவ்வொருவருக்கும் கைநாட்டு என்று சில வெகுமதிகள் கொடுப்பது வழக்கம். கைநாட்டென்றால் கையில் வைக்குதல்.

இம்மாதிரி முதல் முதலில் நல்ல பதார்த்தங்களில் கண்ணைவிழித்துவிட்டு ஒவ்வொருவரும் தங்கள் இருகரங்களையும் நீட்டுவார்கள். அப்படி நீட்டும்பொழுது காரணவன் ஒவ்வொருவருக்கும் காசு, பழம், நகை முதலியவைகளை அவரவர்கள் வயதுக்கும் பதவிக்கும் தக்கப்படி கொடுப்பதுவழக்கம். இதற்குத்தான் கைநாட்டென்று பேர். இதற்குப் பிறகு விஷுவன்

றையதினம் மலையாளிகள் காலையில் கஞ்சி குடித்துவிட்டு பகல் 20-22 நாழிகைக்கு ஒரு வேளைதான் சாப்பிடுவது வழக்கம். இதன் அருத்தம் வருஷப்பிறப்பன்று ஒரு வேளைக் கஞ்சியும் மற்றொருவேளை அன்னமும் கிடைத்தால் இவ்விரண்டிற்கும் வருஷம்முடிய குறைவிருக்காது என்பதாம்.

முதல் முதலில் காலையில் எழுந்தவுடன் யார் முகத்தில் விழிக்கிறோமோ அதை அனுஸரித்து நமது நாளின் அதிர்ஷ்டங்களிருக்கும் என்பது ஹிந்துக்களுடைய தொன்றுதொட்டு வரும் கொள்கைகளிலொன்று. இந்தக் கொள்கை முதல் முதல் காலையில் விழிக்கும் முகத்திற்கு மாத்திரமல்ல. ஏதாவது ஒரு பிரயாணம் முதலியவைகள் செய்ய எத்தனிக்கும்போதும் சுபசகுனங்கள் அபசகுனங்கள் என்று பார்ப்பதும் வழக்கம். ஒரு ஊருக்கு ஒருவன் புறப்படும்போது நல்ல சகுனமாகாவிட்டால் பிரயாணத்தை நிறுத்திவிடுவான். அல்லது வீட்டிற்குத் திரும்பிவந்து உட்கார்ந்து ஒரு வாய் தீர்த்தமாவது குடித்துவிட்டு மறுபடி புதிதாகப் புறப்படுவதுபோல புறப்படுவான். சில அபசகுனங்களுக்கு பிராயச்சித்தம் அல்லது மாற்றுகள் உண்டு. இரவில் புறப்படும்போது ஆகாசத்திலிருந்து நக்ஷத்திரங்கள் உதிர்ந்தால் அது அபசகுனம். அப்படி உதிருங்கால் பச்சைமரத்தைப் பார்த்தால் அந்தப் பாபம் நீங்கும். நக்ஷத்திரங்கள் உதிர்கின்ற ஸங்கதி நூதன சாஸ்திரப்படி மேகங்கள் மோதி அவைகளினின்று உற்பவிக்கும் மேகத்தீ என்று ஏற்பட்டபோதிலும் ஹிந்துக்களின் கொள்கைப்படி அவைகள் ஆகாசத்தில் புண்ணியம்பண்ணி வசித்த மஹாத்மாக்கள் புண்ணியம் குன்றிப்போகவே நட்சத்திர ரூபமாக பூமியில் விழுகிறார்கள் என்பதாம். இது கேவலம் குழந்தைகள் கொள்கையல்ல: மிருச்சகடி என்னும் பழைய நாடகத்தில் 4-வது அங்கத்தில் தாளம் போடுவதில் ஜாலர் மேலிருந்து கீழ்விழும்பொழுது அதை புண்ணியம் குன்றி ஆகாசத்திலிருந்து பூமியிலிறங்கும் நக்ஷத்திரத்திற்கு சமானமாயிருப்பதாக கவி வருணித்திருக்கிறார். இந்த கிரந்தமோ 2,000-வருஷங்களுக்கு முன்னியற்றப்பட்ட கிரந்தம். இம்மாதிரி சில சகுனங்களும் அவைகளுக்கு பரியாயங்களும் ஏற்பட்டிருக்கின்றன.

நமது நாட்டார் கொள்கையைப்பற்றி இவ்வளவு தூரஞ்சொல்லிவிட்டு நமது 5-வது பழமொழியாகிய "அகதிதலையில் பொழுது விடிந்தது" என்பதைப்பற்றி விசாரிப்போம். அகதி எப்பொழுதும் ஒருவருக்கும் நல்லவனல்ல என்பது எல்லாரும் அறிந்திருக்கும் விஷயம். அவன் சொந்த ஜனங்கள், பந்துக்கள், மித்திரர்கள், அவன் பெண்டு பிள்ளைகள் கூட அவன் அகதியாய்விடவே அவனை அலட்சியம் செய்துவிடுவார்கள். அன்றியும் ஏதாவது நமக்கு ஒரு ஆபத்து ஸம்பவித்தால் நாம் அந்த விடியாமுகமுள்ள*தரித்திரன் முகத்தில் விழித்தேன் இன்றைப்பொழுது இப்படியாயிற்று என்று சொல்லுவதும் வழக்கம். இந்தக் கொள்கையினுடைய கதை பின்வருமாறு :—

ஒரு ஊரில் ஒரு அரசன் அதிகாலையில் எழுந்திருந்து தன் மாளிகைமேல் நின்றுகொண்டு இன்னும் துயில் நீங்காதிருக்கும் தனது பட்டணத்தை நாலுபக்கமும் மேலிருந்த வண்ணம் பார்த்தான். எங்கும் நிசப்தமாயிருந்தது. மனிதப்பூண்டு என்பது ஒன்றுகூடக்காணோம். இப்படி பார்த்துக்கொண்டிருக்கும்போது ஒரே ஒரு அகதி ஒரு பழக்கடை முன் நின்றுகொண்டு கீழே விழுந்திருக்கும் பழத்தோல்களை எடுத்துக்கொண்டிருக்கக் கண்டான். தற்செயலாய் அந்த அகதியும் அரசனைப் பார்த்தான். பிறகு அரசன் தனது மொட்டை மாளிகையைவிட்டு அறைக்குட்புகும்பொழுது

* இது வழக்கச்சொல்லில் 'விடியாமூஞ்சி' என்று மருவி வருவதுண்டு.

கதவு நிலை அவன் தலையிற்றாக்கி ரத்தகாயம் பண்ணிவிட்டது. அவன் மனதில் உடனே தோன்றிய தென்னவெனில், அந்தப் பாவிப் பிச்சைக்காரன் முகத்தில் விழித்தோம் : தலையில் காயம் பட்டுவிட்டது. அவன் சண்டாளன். இன்னும் எத்தனை பெயர்கள் பிரதி தினமவன் முகத்தைப்பார்த்து இப்படி என் மாதிரி அவஸ்தைப்படுகிறார்களோ தெரியவில்லை—என்று யோசித்து உடனே ஒரு ஆளையனுப்பி அந்த அகதியைத் தருவித்து அவனைப்பார்த்து "அடேசண்டாளா" இன்றுகாலை எழுந்து நான் உன் முகத்தைப்பார்த்தேன். எனச்கு இன்றைப்பொழுது உன் தலையில் விடிந்தது. என் ஸ்திதி என்னமாயிற்றுப் பார். தலையில் காயப்பட்டு அவஸ்தைப்படுகிறேன். இம்மாதிரி எத்தனை பேர் அவஸ்தைப்படுகிறார்களோ தெரியவில்லை. இவ்வளவு கெட்டவனாகிய நீ இருப்பதிலும் இறப்பது நலம். உன்னைக் கழுவேற்ற உத்தரவிடுகிறேன்" என்றான். இதைக்கேட்டான் அகதி. என்செய்வான் அவன். அகதி சொல்லோ அம்பலமேறாது. அகதிக்கோ ஒருவரும் துணையில்லை. இருக்கட்டும். நாம் நம்மால்கூடியமட்டும் பார்ப்போம் என்று எண்ணிக்கொண்டு அரசனை நோக்கி "மகாராஜாவே என்னைப்பார்த்துத் தங்களுக்கு ரத்தகாயப்பட்டது என்றுசொல்லி என்னைக் கழுவிலேற்ற ஆக்ஞாபித்தீர்கள். நானோ இன்றையதினம் தங்களைப்பார்த்து கழுவிலேற்றப் படப்போகிறேன். நம்முள் யார் ஜன்மம் அதிக கெட்டஜன்மம் என்பதை எல்லாந்தெரிந்த தாங்களே ஊகித்துக்கொள்ளவேண்டும்" என்றான். அரசன் அவன் தைரியத்தையும் யுக்தியையும் கண்டு மெச்சி அவனை மன்னித்தான்.

இந்தப் பழமொழியின் தாத்பரியம் அகதி எல்லாரையும்விட பணத்திலும் செல்வாக்கு முதலியவைகளிலும் இளைத்தவனாகையால், அவன் தலையில் குற்றங்களை சுமத்துவது வழக்கம். அப்படிச் செய்வது நியாயமல்ல. தீர விசாரித்து அகதி ஒருவன் குற்றவாளிதான் என்று நிச்சயப்பட்டபிறகு அவனுக்கு சிட்சை விதிக்கவேண்டும், அப்படியில்லாமல் அவன் அகதியாயிருக்கும் ஒரு காரணத்தைக்கொண்டே அவன்மேல் எல்லாவித பாபத்தையும் சுமத்தி பழிகளை அவன்மேல்போட்டு அவதூறு சொல்வது நியாயமன்று என்றபடி.

## CHARACTER SKETCH : SIR THOMAS MUNRO.

## குணவலி விளக்கம் : ஸர் தாமஸ் மன்றோ பதுமையும், அவர் ஜீவ்ய வரலாறும்.

"தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

இச்சஞ்சிகையின் முகப்பில் படத்தில் சித்திரித்துக் காட்டியிருக்கும் 'மன்றோ ஸ்டாட்யூ' (Munro's Statue) என்னும் பதுமையை சென்னைமா நகரவாசிகள் அனேகமாய் எல்லோரும், மற்றும் இந்நகரைக் கண்காட்சியின் பொருட்டு வந்து கண்ணுற்றுப் போகும் வெளிநாட்டாராகிய அனேகரும் பார்த்திருக்கலாம். இப்பதுமை நாட்டப்பட்டிருக்கும் இடம் கண்ணுக்கு மிகவும் ரமணீயமானது. இந்நகரை ஊடுருவிச்செல்லும் கூவநதி என்னும் ஓர் சிற்றாறு சமுத்திர சங்கமமாவதற்குப் கொஞ்ச மேலாக இரண்டு கிளைகளாகப் பிரிந்து இந்நகரினோர் பாகத்தைச் சிறிய தீவாக்கிப் பின்னும் புனைந்து கடலில் பாய்கிறது. இத்தீவின் இருபுறத்திலும் சாலைமரங்கள் அமைந்த 'மவுண்டு ரோட்டு' என்னும் விஸ்தாரமான சாலை கிளைநதிகளை இரண்டு நேர்த்தியான பாலங்களால்* கடந்துகொண்டு தென் வடலாய் ஊடுருவிச்செல்கின்றது. இப்பாதையின் இருபுறத்திலும் கண்களைக் கவரத்தக்க பசும்புற்கள் நிறைந்துள்ள மைதான வெளிகள் இருக்கின்றன. கிழக்குப் பக்கத்தில் இருக்கும் மைதானத்தில் மாலைப்பொழுதில் குதிரைப் பந்தயம் நடப்பதையும், துரைமார்கள் பந்தயத்திற்காகக் குதிரைகளைப் பழக்கிக்கொண்டிருப்பதையும், இவைகளைப்பார்க்க ஜனங்கள் திரள்திரளாய் கூட்டம் கூடியிருப்பதையும் பார்க்க வெகு விநோதமாயிருக்கும். மற்றப் பக்கத்து மைதானத்திலோ சேனைவீரர்கள் கவாத்துப்

* தென் புறத்திலிருக்கும் பாலத்திற்கு கவர்னர் மாளிகை வாராவதி என்றும், வடபுறத்துப் பாலத்திற்கு வாலாஜா வாராவதி என்றும் பெயர்.

பழகுவதையும், சாயங்கால வேளைகளில் வாலிபர்கள் பந்தடிப்பதையும் பார்க்கலாம். இத்தீவின் நாலாபக்கத்திலும் ஆங்காங்கு மரங்களுக்கிடையிலேயும், சிற்சில தாழ்ந்த கட்டிடக் கும்புகளிலேயுமிருந்து ஆகாயத்தை அளாவி நிற்கும் நகர சபாமண்டபம் (Victoria Public Hall), புதிய முனிசிபல் ஆபீஸ் சென்னை இருப்புப்பாதை 'ஸென்டிரல் ஸ்டேஷன்,' 'ஹைக்கோர்ட்டு,' கோட்டைக் கட்டிடங்கள், சர்வகலாசபை மண்டபம் (Senate House), கலச மஹால், கவர்னர் மாளிகை முதலான இத்தகைய மாடகூடங்களினுடைய கோபுரசிகரங்களின் தோற்றம் நேத்திரோத்ஸவமுண்டாக்கத்தக்க நேர்த்தியான காட்சியாய்த் தோன்றும். இவ்வருமையான தோற்றத்தையுடைய இத்தீவின் நடுவில், சாலையின் மத்தியில் அண்டாகாரமாய் அமைத்ததும், மனோரஞ்சிதமான பூஞ்செடிகள் நிறைந்துள்ளதுமானதோர் மேடையில், கருங்கல்லாலாக்கியதும், சற்றேறக்குறைய பூமிமட்டத்திற்கு 25 அடிக்குமேல் ஸ்தம்பாகாரமாய் நிற்பதுமான ஓர் அழகிய பீடத்தில் இந்த மன்றோசீமானது பதுமையானது கிழக்கு நோக்கிய முகமாய் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. போர்க்களத்திலும் சற்றேனும் சளைக்காத கம்பீரமுள்ளதாய்த்தோன்றும் பாராசாரிக்குதிரை ஒன்றின்பேரில் ஏறி ஓர் கையில் கடிவாளம்பிடித்து மற்றக்கையில் உருவின கத்தியோடு எதிரிகளை எதிர்த்துத்தாக்கச் சேனையை நடத்தத்தயாராய் வெகுதிடசித்தத்துடன் வீற்றிருக்கிறார்போல மிகவும் சிறந்த வேலைப்பாடுடன் நிர்மாணித்திருக்கப்பட்ட இப்பதுமை இத்தீவிற்கு ஒரு நடு நாயகமாகும் திலகமணிபோல் விளங்குகிறது. இக்காட்சியின் அருமை பெருமையை அறிந்துதான் இப்பதுமைக்கு இங்கு இடமளித்தார்கள் போலும். இவ்வுருவை அனேகர் பார்த்திருப்பினும், இதில் பிம்பரூபமாய்ப் பிரகாசிக்கும் மகா பிரபு யாவர்? யாதுகாரணத்தின்பொருட்டு அவருக்கு இப்பதுமைரூபம் அமைக்கப்பட்டு காண்போர் கண்களை ஆனந்திக்கத்தக்கதும் விசேஷமாய் ஜனங்கள் நடமாடக்கூடியதுமான இடத்தில் நாட்டப்பட்டிருப்பது? இப்பதுமை எவ்வகைப் பொருளால் அமைக்கப்பட்டுள்ளதோ? இவ்வழகிய பதுமையைச் சிற்பித்த சிற்ப வல்லாளர் யாவரோ?—என மனதில் உதயமாகும் சில கேள்விகளைக் கருத்துடன் கேட்டறிந்துகொண்டார் சிலரேயுளர்.

கொஞ்சநாளைக்கு முன் ஓர்தினத்தில் நாம் 'மவுண்டு ரோட்' வழியாய்ச் செல்லுகையில் இப்பதுமை நிற்குமிடத்தில் சற்று நிதானித்து அதன் சிறந்த லக்ஷணங்களையும், வேலைப்பாட்டின் திறத்தையும் சிந்தித்துக்கொண்டு அதைக் கண்ணோக்கின வண்ணமாய் நிற்கையில், சமீபத்தில் வந்துகொண்டிருந்த இருவர்களில் ஒருவன் மற்றவனைப்பார்த்து, 'இதென்ன ஆச்சரியம்! கல்லாலோ, செம்பாலோ, இரும்பாலோ செய்யப்பட்ட இந்தப் பாவையை இவர் வெகு ஆச்சரியமாய்க் கண்கொட்டாமல் பார்த்துக்கொண்டிருக்கிறாரே. என்ன காரணமோ தெரியவில்லை' என்றுசொல்ல, அதற்கு மற்றவன் 'அது என்னமோ நான் ஒரு ஆச்சரியத்தையும் காணவில்லை' என்று சொல்லிக்கொண்டே இருவரும் அப்புறம் போனார்கள். நடந்த இச்சம்பாஷணையால் நாம் அதிக வியப்புற்று போகுமவர்களைக் கூவியழைத்து, இப்பிம்ப ரூபமாய்விளங்கும் பிரபு யாவரென்று நீங்கள் அறிவீர்களோவென்ன, அதில் ஒருவன் 'இவர் பரங்கிப்பட்டாளத்துள் ஓர் தலைவன்; அவன் தன் ஜாதிக்கும் வேலை அந்தஸ்திற்கும் குறைவானதும் அவமானமுண்டாக்கக்கூடியதுமான ஓர் கெடுதொழில் புரிந்ததால் காண்போரெல்லாம் பார்த்து அவமதிக்குமாறு இங்கு அவனுருவைக் காற்று மழை வெயிலில் அடிபட்டு காக்கை கழுகுகள் தலையில் உட்காரும்படியாக வெட்டவெளியில் நிறுத்தியிருக்கிறார்கள்' என்று புகலக்கேட்டு எமக்கு வெகு நகைப்புண்டாயிற்று. நகைப்புக்குக் காரணம் படிப்பு, நாகரீகம், சீர்திருத்தம் முதலான இவைகளெல்லாம் நாளுக்குநாள் மேன்மேலும் அபிவிர்த்தியாய்வரும் இக்காலத்

திலும் இப்படி தப்பான அபிப்பிராயம் சிலர் கொண்டிருக்கிறார்கள் என்பதே. நாம் அவர்களுக்கு அந்தப் பிரபுவின் சௌரிய ஔதாரிய குணங்களேயும் பெருமைகளேயும், அப்பதுமையின் சிற்ப சிலாக்கியத்தையும் நன்ருகப் புகட்டிக் காட்டிய பிற்பாடு தங்கள் பிசகான அபிப்பிராயத்தை தவிர்த்து அவர்கள் வழிநோக்கிச் சென்ருர்கள். இப்பதுமையைக் குறித்த பல விஷயங்களைத் தெரிந்துகொள்ள விரும்புவோர்க்கு அவற்றை ஒருவாறு அடியில் சுருக்கிச் சொல்வோம்.

## ஸர் தாமஸ் மன்ரோ சரித்திரம்.

மேற்சொன்ன பதுமை ரூபத்தில் காணப்படுமவர் யாரென்ருல், நமது சென்னை ராஜதானியில் 1820-ம்ஸு முதல் 1827-ம்ஸு வரையில் கவர்னராயிருந்து அதிகாரம் செலுத்திவந்த ஸர் தாமஸ் மன்ரோ என்னும் கனவான். இவருடைய சரித்திரத்தைப் படிப்பதால், ஒருவன் எவ்வளவு எளியவனயிருந்தாலும் விடாமுயற்சியும், புத்திசாதுரியமும், எடுத்த காரியத்தைக் கருத்தாய்ச்செய்து முடிக்கும் குணமும் அவனுக்கு இருக்குமேயானல் கடைசியில் நல்ல பதவியை அடையலாமென்பது நன்ருய்ப் புலப்படுகிறது.

> "வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்
> முள்ளந் தனைய துயர்வு."

இவர் இங்கிலாந்தை யடுத்த ஸ்காட்லாந்தில் உள்ள கிளாஸ்கோ (Glasgow) என்னும் பட்டணத்தில் 1761-ம் வருஷம், மேமீ 27உ பிறந்தவர். இவர் தந்தையாகிய அலெக்ஸாந்தர் மன்ரோ என்பவர் ஒரு வியாபாரி. தாமஸ் மன்ரோ பதினறு வயதிற்குள்ளாகவே கிளாஸ்கோ சர்வகலாசாலையில் படித்து கணிதம், இலக்கணம், சரித்திரம் முதலான சாஸ்திரங்களில் மிகத்தேர்ச்சியடைந்தார்.

> "எண்ணென்ப வேனை யெழுத்தென்ப விவ்விரண்டுங்
> கண்ணென்ப வாழு முயிர்க்கு."

போர்வீரருக்கும், ராஜரீக காரியங்களைச் சரிவர நடத்துவோருக்கும் வேண்டியவையான தேககாத்திரமும், வலிமையும், விசேஷ சுருசுருப்பும், ஆத்தும பரித்தியாகமும், மனோதைரியமும் இவரிடத்துப் பால்யத்திலேயே நன்ருய் விளங்கியது. 1777-ம் வருஷத்தில் ஒரு வர்த்தகரிடத்தில் இவர் குமஸ்தாவாக அமர்த்தப்பெற்ருர். பிறகு அடுத்த வருஷத்திலேயே அவர் தகப்பனர் வியாபாரம் நசித்துப்போய் மிகவும் எளியவராய்விட்டபடியால் தாமஸ் மன்ரோ தன் வேலையை விட்டுவிட்டு 'ஈஸ்டு இந்தியா கம்பெனி' யாரிடத்தில் ஒரு படையாளாகச்சேர்ந்து இந்தியாவுக்குவரும் அவர்கள் கப்பலொன்றில் பிரயாணப்பட்டு வரவேண்டியதாயிற்று. போர்ச்சேவகனயமர்ந்தும் பிரயாணச் செலவுக்கு பணம்கொடுக்க வகையில்லாததினல் அதற்கு ஈடாகக் கப்பலில் ஓர் சாமானிய மாலுமியாக வேலைசெய்து 1780-ம் வருஷம் ஜனவரிமீ 15உ சென்னப்பட்டணம் வந்துசேர்ந்தார். இந்தியாவில் வந்ததும் இவருக்கு ஏற்பட்ட சம்பளம் 28-ரூபாய். இச்சொற்ப வரும்படியுடன் அவருக்குண்டான சௌக்கியக்குறைவைச் சொல்லவும் வேண்டுமோ. மாதமொன்றுக்கு வேலைக்காரனுக்கு 7-ரூபாயும், சமையற்காரனுக்கு $3\frac{1}{2}$-ரூபாயும், வண்ணனுக்கு $3\frac{1}{2}$-ரூபாயுமாகக் கொடுக்கவேண்டியிருந்ததால் இவர் மற்ற செலவுகளை 14-ரூபாயிலேயே நடத்திக்கொள்ள வேண்டியதாயிருந்தது. புசிக்கச் சரியான போஜனமில்லாமலும், உடுக்கச்சரியான உடையில்லாமலும் வெகுவாய்த் தரித்திரத்தின் கொடுமையால் அவதிப்பட்டார். அவர் தன் சகோதரிக்கு எழுதின ஒரு கடிதத்தில் தான் இந்தியாவுக்குவந்து 3-வருஷங்கள் வரையிலும் ஒரு கோணியின்மேல் புஸ்தகத்தை தலையணையாக வைத்துக்கொண்டு நித்திரை செய்துவந்ததாக எழுதியிருக்கிருர்.

இவர் வந்த கொஞ்ச காலத்திற்குப் பிற்பாடு கம்பெனியாருக்கும், மைசூர் சுல்தானகிய ஐதர் ஆலிக்கும் போர் உண்டாயிற்று. 1780-ம் வருஷம் முதல் 1784-ம் வருஷம் வரையில் நடந்த மைசூர் யுத்தத்தில் நேர்ந்த போர்டோநோவோ, பாலிலோர், சோளிங்கர், சித்தூர்,

ஆரணி, கூடலூர் முதலான சண்டைகளி லேயும், சிதம்பரம், திருப்பாசூர், கூடலூர் முற்றுகைகளிலேயும் இவர் படையாளாகப் போர்த்தொழில் புரிந்திருக்கிறார். இவருடைய சவுரியத்திற்காக 1786-ம் வருஷம் இவருக்குப் பட்டாளத்தில் 'லெப்டினண்டு' என்னும் அந்தஸ்து அளிக்கப்பட்டது. 1786-ம் வருஷம முதல் 1792-ம் வருஷம்வரையில் ஐதர் ஆலியின் மகனாகிய திப்புசுல்தானுடன் நடந்த மைசூர் யுத்தத்தில் இவர் இருந்து சண்டை செய்திருக்கிறார். சண்டையில் திப்பு தோல்வியடைந்தபடியால் ஸ்ரீரங்கபட்டணத்தில் சமாதான உடன்படிக்கை செய்துகொண்டான். இதன் பிரகாரம் சேலம் ஜில்லாவில், கிருஷ்ணகிரி, தர்மபுரி, ஊத்தன்கரை, திருப்பத்தூர் முதலிய தாலூக்காக்கள் அடங்கிய பாகமாகிய 'பாராமகால்'* கம்பெனியார் வசமாயிற்று. அப்போது 1792-ம் வருஷம் ஏப்ரல் மாதம் இந்த 'பாராமகாலுக்கு' ரீட்துரையுடன் இவர் உதவிக்கலெக்ட்ராக நியமிக்கப்பட்டார். ஐதர், திப்பு இவர்களுடைய கொடுங்கோன்மையால் சீர்கெட்டிருந்த இந்த பாகத்தைத் திருத்தம் செய்து, இப்போது இச்சென்னை ராஜதானியில் நடந்துவரும் 'ரயத்துவாரி ஸிஸ்டம்' என்னும் குடிமிராசு ஏற்பாட்டை நிலத்தீர்வையின் பொருட்டு இவரே 'பாராமகாலில்' முதல் முதல் புதிதாய் ஸ்தாபித்தார். இவர் இங்கே இருக்கும்போது கட்டுவித்த சத்திரங்களும், வெட்டுவித்த குளங்களும், இவரால் ஏற்படுத்தப்பட்ட சாலை மரங்களும், இவர் தனக்குள் பட்ட குடிகளிடத்தில் வெகு அன்பு பாராட்டி வந்ததற்கு அறிகுறியாக இன்றும விளங்குகின்றன. 1796-ம வருஷம் இவருக்கு 'காப்டன்' என்னும் அந்தஸ்து கொடுக்கப்பட்டது. 1799-ம் வருஷம் மார்ச்சு மாதம் திப்பு மறுபடியும் போர் துவக்கவே, இவர் கலெக்டர் வேலையை விட்டு ஸ்ரீரங்கபட்டணப் முற்றுகையின் பொருட்டு ஜெனரல் ஹாரிஸ் என்பவருக்கு உதவியாக வரவேண்டியதாயிற்று. பிற்பாடு இவர் மைசூர் நிலத்தீர்வை முதலான விஷயங்களைக்குறித்து ஏற்படுத்தப்பட்ட காரியதரிசிகளில் ஒருவராக நியமிக்கப்பட்டார். இந்த வேலை மேற்சொன்ன வருஷம் ஜூலை மாதத்துடன் முடிந்துபோகவே, புதிதாய் அப்போது தான் கம்பெனியாருக்குக் கிடைத்த கன்னட ஜில்லாவுக்கு உடனே கலெக்டராக தாமஸ் மன்றோ கவர்னர் ஜெனரல் அவர்களால் தெரிந்தெடுக்கப்பட்டார். நிலைகுலைந்திருந்த இந்த நாட்டில் இவர் கலெக்டராயிருந்த 15-மாதங்களுக்குள், அவ்விடமிருந்த கொடுங்கொள்ளைக்கூட்டங்களை வேரோடுகளைந்தும், சர்க்காருக்கு வரவேண்டிய தீர்வைகளைக் குறித்து குடிகளுக்கு தொந்தரவில்லாத ஏற்பாடுகளைச் செய்தும், அந்நாடு முழுவதையும் நீதியான ஆட்சிக்குள்ளாக்கினார். இவர் கன்னட நாட்டை நேரான நிலைமைக்குகொண்டு வருவதற்காக எடுத்துக்கொண்ட விசேஷ முயற்சியின் பொருட்டு மேஜர் என்னும் அந்தஸ்திற்கு உயர்த்தப் பெற்று, நிஜாமால் கம்பெனியாருக்குக் கொடுக்கப்பட்ட, 'விடுபட்ட நாடுகள்' (Ceded Districts) என்று இப்போதும் வழங்கிவரும் பல்லாரி, கடப்பை, கர்நூல் அநந்தபூர் ஜில்லாக்களுக்குக் கலெக்டராக இவரே தகுந்தவரென்று 1800-ம் வருஷம் நவம்பர் மாதம் கிளைவ் பிரபு அவர்களால் நியமிக்கப்பட்டார். இவர் இவ்வதிகாரத்தைக் கைக்கொண்டதும், அந்நாடுகள் முழுவதும் கொள்ளையே கருத்தாய்த் துவம்ஸம செய்து வந்த 80-பாளையக்காரர்கள் அல்லது சிற்றரசர்களை அடக்கி, அவர்களிடமிருந்த ஏராளமான சிப்பாய்ப் பட்டாளங்களையும் கலைத்து விடும்படி செய்தார். கொடுங்கொள்ளையும் கொலைகளும் ஒடுங்கி ஜனங்களுக்குள் அமைதி உண்டாகவே, பல நிலங்களையும் அளவிட்டு அதற்குச் சரியான தீர்வையும் ஏற்படுத்திச் சர்க்கார் வரி குந்தகமில்லாமல் வந்து சேரும்படியான ஏற்பாடுகளையும செய்தார். இவர் கடப்பை முதலான இடங்களில் இருந்தகாலத்தில் அதிக மழையால் சற்றேறக்குறைய 1000-ஏரிகளும் 800-வாய்க்கால்களும் உடைந்து சிதறுண்டு போகவே, 7-லக்ஷம் ரூபாய் வரையில் அவைகளைச் செப்பனிடுவதில் செலவிட்டு குடிகளுக்குப் பேருதவி புரிந்தார். அப்போது இவருக்கு 'கானல்' என்னும் பதவியும் அளிக்கப்பட்டது.

(இன்னும் வரும்.)

* பாராமகால் என்பதற்கு 12-அரண்மனைகள் என்று பொருள், அதாவது பன்னிரண்டு சிற்றரசர்கள் அரசாட்சி செய்துவந்த நாடு என்று அருத்தமாகும்.

## ON DEBT.
## கடன்.

---

கடன் வாங்குவது என்னும் எண்ணம், நேற்று இன்று உண்டானதல்ல. மனித சிருஷ்டியான சில நாள்களுக்கெல்லாம் இந்த எண்ணம் வந்திருக்கவேண்டும். சத்தியம் இன்னது, பொய் இன்னது,, தெய்வம் இன்னது என்ற எண்ணம்கூட இல்லாத நாகரீகமற்ற ஜன சமூகங்களிலும் கடன் கொடுத்தல் வாங்குதல் முதலியன நடந்து வருவதாக நாம் அறிகிறோம். பொன் வெள்ளி முதலிய உலோகங்களை யறியாத மிலேச்சர்களுக்கு ரூபாயையும் பவுனையும் பற்றி எண்ணம் உண்டாகக் கூடுமா? ஒவ்வொரு வஸ்துவையும், விஷயத்தையும் ஒருவர் அறிந்த பிறகுதான் அதைக் குறித்து ஒருவிதமான எணணமும், அவ்வெண்ணத்தைக் குறிக்க வார்த்தைகளும் ஏற்படும். கடன் என்னும் எண்ணத்தைக் குறிக்கும் வார்த்தைகள் மாத்திரம், இப்போது தெரிந்தவரையிலுள்ள எல்லாப் பாஷைகளிலுமிருப்பதாகத் தெரியவருகிறது. இதற்குக் காரணம் வெட்டவெளியா யிருக்கிறது. எவ்வளவு நாகரீகமற்ற ஜனசமூகமானாலும் அந்த சமூகத்திலுள்ள ஒவ்வொருவனும் தனக்கு வேண்டியவற்றையெல்லாம் தானாகவே தேடிக்கொள்ள முடியாது. செம்படவர்கள் கூட்டத்தில் ஒருவன் யாதொரு காரணத்தாலாவது ஒருநாள் மீன் பிடிக்கச் செல்லாததினால் அன்றையதினம் அவனுக்கு வரும்படி யில்லாமற்போகுமாகில், அண்டையயலில் கடன்வாங்கியன்று ஜீவனம் செய்யவேண்டியிருக்கும். பூர்வத்தில் ஜனங்கள் மண்ணை உழுது பயிரிட்டுச் சாப்பிடுவதற்குமுன் மீன் பிடித்தும் வேட்டையாடியுந்தான் ஜீவனம் செய்து வந்ததாகத் தெரியவருகிறது. அந்தக் காலத்திலேயே ஒருவரிடமிருந்து ஒருவர் உதவிபெறவேண்டியிருந்ததென்று தெரியவருகிறது. நாகரீகமற்ற ஜனங்களைக் குறித்து நாம் வாசிக்கும் கதைகளில் சில விநோத விஷயங்கள் தெரியவருகின்றன. செம்படவர் கூட்டத்தில் ஒருவனுடைய படகை யொருவன் கடன் வாங்கிக்கொண்டுபோனால், மறுபடியும் அந்தப் படகைத் திருப்பிக்கொடுத்துவிட வேண்டியதுமன்றி, அந்தப் படகைக்கொண்டு பிடித்த மீன்களில் ஒரு பகுதியும் படகுக்காரனுக்குக் கொடுக்கவேண்டியது ஒரு தீவில் வழக்கமாம். இந்த வழக்கத்தை யுற்றுப்பார்த்தால், அது நாம் வருஷவாரி நூற்றுக்கு இவ்வளவு என்று கடனுக்குக் கொடுக்கும் வட்டிக்குச் சமானமானதென்று அறிந்துகொள்ளலாம். ஒரு சாமானைக் கடன் கொடுத்துப் பிறகு அதைத் திருப்பி வாங்கும் விஷயத்தைக்குறித்து ஜனங்களுடைய எண்ணம் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் மாறுபட்டு வந்ததாக நாம் காணலாம். இத்தாலியா தேசத்திலுள்ள ரோம் என்னும் நகரம் இராஜதானியாயிருந்த காலத்தில் அந்த இராச்சியத்தில் கடன் விஷயத்தைக்குறித்து மிகவும் கடுமையான சட்டங்கள் ஏற்படுத்தப்பட்டிருந்தன. கடன் கொடுத்து, வாங்கும் சாமான்கள் இரண்டுவிதமாகப் பிரிக்கப்பட்டன; சில சாமான்கள் விஷயத்தில், எந்த சாமான் கடனாக வாங்கப்பட்டதோ அதே சாமான் திருப்பிக் கொடுக்கப்படவேண்டியிருந்தது; மற்றவைகள் விஷயத்தில் வாங்கிக்கொண்ட சாமானுக்கு, விலையிலும் குணத்திலும் சரியான சாமான் பதில் வாங்கிக்கொடுத்தால் போதும். சமையல் செய்ய அரிசி கடன் வாங்கிக்கொண்டால் அதே யரிசியை எப்படித் திருப்பிக்கொடுக்க முடியும்? வேறு அரிசிதான் வாங்கிக்கொடுக்கவேண்டும். ஒரு ஊருக்குப்போக வண்டியொன்று கடன் வாங்கிக்கொண்டால் அதே வண்டிதான் திருப்பிக் கொடுக்கவேண்டும். இந்தவிதமான வித்தியாசம் இப்பொழுதுகூட சில விஷயங்களில் இருந்துகொண்டிருக்கிறது. முன்காலத்தில் கடன்காரர்களைக் குறித்த சட்டம் மிகவும் கொடுமையாக இருந்ததென்பதற்கு ஆதாரம் உரோமகருடைய சட்டங்களில் வேண்டிய அளவு அகப்படும். கடன் கொடுத்தவனுக்கு வாங்

கிக்கொண்டவன்பேரில் எவ்வளவு அதிகாரம் செலுத்தலாமோ அவ்வளவு செலுத்த சட்டப்படி அனுமதியுண்டு. கடன் வாங்கினவனைக் கொலைசெய்து விடுவதற்குக்கூட அவர்களுக்கு அதிகாரமிருந்தபோதிலும், தங்களுக்கு அடிமையாகச் செய்து கொள்ளுவதுதான் ஏறக்குறைய வழக்கமாயிருந்தது. கடன் கெடுவுக்குமேல் அறுபது நாள்கள் கருணையின் பேரில் கொடுப்பதுண்டு. அதற்குள் கடன் கொடுபடாவிட்டால், கடன்காரன் அடிமையாகவேண்டியதுதான். பிறகு அவனை சிறைச்சாலையில் மூடிவைத்துச் சோறுகூடப் போடாமல் வருத்தப்படுத்துவார்கள். கடன் காரனுடைய சுற்றத்தார் யாருக்காவது இரக்கம்வந்து கடனைத் தீர்த்தால்தான் அவனுக்கு மீட்சியுண்டு: இல்லாவிட்டால் அவன் சிறையிலிருந்தேதான் இறக்கவேண்டும். அந்த காலத்து அரசாங்கமும் சட்டதிட்டங்களும் இந்தக் காலத்தவ்வளவு விருத்தியடைந்தவையல்ல. மகன் எவ்வளவு உன்னத ஸ்திதியிலிருந்தபோதிலும், அவனுக்கு எந்த விதமான தண்டனையும் காரணமில்லாமலே விதிப்பதற்கு தகப்பனுக்கு அனுமதிகொடுத்திருந்த இராச்சியத்தில், கடன்காரர்களைக்குறித்த சட்டம் கொடுமையாக விருக்கக்கேட்பானேன். கடன்காரர்களுடைய கொடுமையைக் குறித்து அங்கிலேய நாடக கவிசிரேஷ்டராகிய ஷேக்ஸ்பியர் என்பவர் வெனிஸ் வணிகன் என்னும் கதையில் நன்முக விவரித்திருக்கிறார். தன்னுடைய சிநேகிதன் பஸ்ஸானியோவுக்காக அன்டோனியோ என்னும் வியாபாரி கடன்வாங்கிவிட்டு ஷைலக்கிடத்தில் பாம்பின் வாயில் அகப்பட்ட தேரைபட்டபாடு பட்டது உலகம் மறக்கவே மறக்காது. அக்காலத்தில் ஷைலக் என்ற ஒருவன்தான் அந்தமாதிரி கடினசித்தமுள்ளவனென்று எண்ணவேண்டாம். ஒரு பானை சோற்றுக்கு ஒரு அரிசி பதம் என்ற பழமொழிப்படி அக்காலத்தாரைக் குறித்துக் காட்டுவதற்காகவே ஷைலக் என்னும் ஒரு நாடக பாத்திரத்தை அந்த நாடகத்தில் வருணித்திருக்கிறார். ஹாம்லெத் என்னும் நாடகத்திலும், பொலோனியஸ், தன் குமாரனுக்கு புத்திசொல்லும் இடத்தில் கடன் கொடுக்கவும் வேண்டாம் வாங்கவும் வேண்டாம் என்று வற்புறுத்தியிருக்கிறார். கடன் விஷயமாக முதலில் அவர் மிகவும் வருத்தப்பட்டவர். ஆதலால் 'பழம் புண்ணாளி பாதி பரிகாரி' என்றபடி மற்றவர்களுக்கும் அதைக்குறித்து புத்திமதி கூறியிருக்கிறார். கோல்ட்ஸ்மித் என்னும் அங்கிலேய கவிசிரேஷ்டர் கடன் வாங்கி மானம் இழந்தது எல்லாருக்கும் நன்றாய்த் தெரியுமே.

இந்து தேசத்திலும் கடனாளிகளைக் குறித்த சட்டம் வெகு கொடுமையாகவே யிருந்தது. கடன் கொடுத்தவன் இஷ்டப்படியெல்லாம் கடனாளி நடந்தே தீரவேண்டும். அவன் என்ன சித்திரவதை செய்தபோதிலும் அதற்குக் கேள்வி முறையே கிடையாது. கடனாளிகளைக் கையிலும் காலிலும் கிட்டுபோட்டு வருத்தப்படுத்துவது தென்னாட்டில் வழங்கி வந்ததென்று நமது பாட்டன்மார்கள் சொல்லக்கேட்டிருக்கிறோம். சேலம் ஜில்லாவைச் சேர்ந்த ஓமலூரிலிருந்த நாராயணபாரதி யென்ற ஒரு கவிவாணர் அவ்வூர் வேங்கையப்ப செட்டியிடம் கடன் வாங்கியிருந்தார். அச்செட்டியின் மக்களாகிய மணவாளன், நாராயணன் இவர்கள் இவரைக் கடனுக்கு மிகவருத்தம்செய்து, கடைசியில் இவரால் கொடுக்கமுடியாதென்று தெரிந்ததன்பேரில் தங்கள் இருவர் விஷயமாக ஒரு பிரபந்தம் பாடும்படி படாதபாடுபடுத்தினர்கள். இவரோ "அரங்கனைப் பாடிய நாவால் மற்றொரு குரங்கனைப் பாடேன்" என்று கூறிய அழகிய மணவாளதாசரைப்போல், மனிதர் விஷயமாய்ப் பாடுவதில்லையென்று பிடிவாதம் பிடித்ததின் பேரில், விஷ்ணு விஷயமாகவாவது பாடி அதில் எங்கள் பேர்கள் வரும்படி அமைத்துப் பாடவேண்டுமென்று நிர்ப்பந்திக்க வடவேங்கடசதகம் பாடி மீட்சியடைந்ததாக ஒரு கதையுண்டு. சத்தியவாக்கு அரிச்சந்திரனைக்

கூட வல்லவர் கௌசிகர் வெகுபாடு படுத்தி விட்டார்.

கொடுத்த கடனை மீட்பதற்கு இந்துதேசம் முழுமையும் "தார்ணு" என்றொரு சம்பிரதாயம் இருந்தது. கடனாளி வீட்டுவாசலில் ஒரு பிராமணனை மறியல்போட்டு வைப்பதற்குத்தான் "தார்ணு" என்று பெயர். இந்த வழக்கம் அனாதிகாலமாக இத்தேசத்தில் வழங்கிவந்திருக்கிறது. உபநிஷத்துக்களில் இதைக் குறித்து விஸ்தாரமாகக் கூறியிருக்கிறது. "பிராணதாரணம்" என்னும் வடமொழிதான் "தார்ணு" என்று பிற்காலத்தில் மருவியது நமது தேசத்துப் பிராமணர்கள் தாங்கள் சாப்பிடுங் காலத்திலெல்லாம் இன்றைக்கும் நாளைக்கும் வெளியில்வந்து யாராவது சாப்பாட்டுக்குக் காத்திருக்கிறார்களா என்று பார்க்கிற வழக்கம் இருக்கிறது. பிராமணனை வெளியில் பட்டினிபோட்டுவிட்டு கடனாளி தான் சாப்பிட்டுவிட்டால் தனக்கு பிரமஹத்தி தோஷம் வருமென்று, பயந்து எவ்விதத்திலாவது கடனைத் தீர்க்க வழிதேடுவான் என்பது தான் அதன் கருத்து. இந்த வழக்கத்திலிருந்து தற்காலத்திலுள்ள ஜப்தி அல்லது மறியல் என்னும் வழக்கம் உண்டாயிற்று.

மனிதர்களெல்லாரும் கெட்ட எண்ணமுள்ளவர்களாகவே யிருப்பார்களோ? சில ஜனங்கள், தங்களுக்குக் கடன்கொடுக்க வேண்டியவர்கள் வாஸ்தவத்திலேயே கையிளைத்துக் கொடுக்கச் சக்தியற்றவர்களென்று தெரியவந்தால் தயாளகுணத்துடன் மன்னித்து விடுவதையும் கண்டிருக்கிறோம். காஞ்சிபுரத்தில் மார்க்கசகாயம் பிள்ளையென்ற ஒரு லக்ஷாதிகாரியிருந்தார். அவரிடம் கடன் வாங்காதவன் அவ்வூரிலேயே இல்லை. அவர்களுள் கொடுக்கச் சக்தியுள்ளவர்கள் தன்னை மோசம் செய்கிறார்கள் என்று தெரிந்தால் கொஞ்சம் கூட தயைதாக்ஷிணிய மில்லாமல் கண்டித்து பணத்தை வசூலித்துவிடுவார். ஏழை எளியவர்கள் கொடுக்கச் சக்திபற்றவர்கள் இவரைக் காண்பதற்குக்கூடத் துணியாமல் ஓடி ஒளிகிறார்கள் என்று இவருக்குத் தெரியவந்தது. இவருக்கு வெளியில் போகவேண்டிய அலுவல்கள் எவ்வளவு இருந்தாலும், தன்னுடைய ஏழைக்கடனாளிகள் மனதைப் புண்ணுக்கக் கூடாதென்றே வெளியில் புறப்படுவதை நிறுத்திவிட்டார். எப்போதாவது வெளியில் வண்டியின்பேரில் போகும்போது தப்பித்தவறி யாராவது எதிரேவருவதாக அவருடைய வண்டிக்காரன் சொன்னால், வண்டியின் கதவுகளையெல்லாம் நன்றாக மூடிவிடும்படி வண்டிக்காரனுக்கு உத்திரவு செய்வார். வண்டிக்காரன் இவரைக் குழந்தைப் பருவத்திலிருந்தே வளர்த்தவனாதலால் இவருடைய கடன்காரர்களையெல்லாம் அவனுக்கு நன்றாகத் தெரியும். கதவை மூடுவதன் அருத்தம் என்னவென்றால், கடன்காரர்கள் தன்னைப்பார்த்து மனவருத்தப்படக் கூடாதென்பதுதான். புண்ணியகாலங்கள் வருங்காலத்தில் தன் ஏழைக் கடன்காரர்களையெல்லாம் கூப்பிட்டு அவர்களுக்கு அவ்வளவு பணமும் தானம் கொடுத்து விட்டதாகச் சொல்லி அவர்கள் பத்திரத்தைக் கிழித்து மீட்டுவிடுவார்.

இந்த இரண்டு குணங்களுள் எது சிரேஷ்டமென்பது நாம் சொல்லவேண்டியதேயில்லை. 'கொட்டினால் தான் தேள் கொட்டா விட்டால் பிள்ளைப்பூச்சி யாதலால், மோசக்காரர்களிடம் மறியல் முதலிய கொடுமை அவ்வளவும் வேண்டியதே. இந்தக் கொடுமைகள் தான் தற்காலத்திய சிவில் கோர்ட்டு ஜப்திகளும் கடன்காரர்களுடைய சிறைச்சாலைகளுமாக மூர்த்திகரித்திருக்கின்றன. 'இன்ஸால்வெண்டுகோட்டு' என்று ஒருகோர்ட்டு இருக்கிறதே, அதுதான் பின்சொல்லிய குணத்துக்கு இலக்காயிருக்கிறது. தன்னுடைய புத்தி வலிமையினால் அசாத்தியமான காரியங்களையும் செய்து முடிக்கவல்லவனொருவன் விதிவசத்தால் கடன் தீர்க்க முடியாமற்போனால், அவனை அடியோடு கெடுத்துவிடுவது நல்லதா? அவன் பட்ட கடனிலிருந்து அவனை மீட்பித்து விட்டால் அவன் மிகவும் பெரிய மனிதனாகவும் கூடும். இதற்குதாரணமாக அநேக கனவான்களை நமக்குள்ளேயே காணலாம். ஆகையால் மிகுந்த ஜாக்கிரதையுடன் சில கடன்காரர்களை மீட்கவேண்டியதும் தருமமே.

## POEMS
## "PSLAM OF LIFE."
## கீர்த்தனம்.

வாழ்வு.

இராகம் வேசடை—தாளம் ரூபகச்சாப்பு.

பல்லவி.

வாழ்வென்பதென்ன ஓமாயமென்றெண்ணி
மதியிழந்தாய்-நெஞ்சமே-நீ உய்யுமோர்
கதியிழந்தாய்-நெஞ்சமே-சும்மா உன்றன்
விதிமைநொந்தாய்-நெஞ்சமே.

அநுபல்லவி.

வாழ்வென்பதீசன்செய் மாவிந்த்ரஜாலமோ
ஏழைக்கூத்துப்பார்க்க அவர்க்கென்ன சீலமோ—
[வாழ்வென்ப

சரணங்கள்.

வாழ்வென்பது நமக்கீந்த பெருமாஸ்தி
வம்பாயிழந்தால் அதியும் பலன் நாஸ்தி
சூழும்பொருள சொப்பனமென்று தள்ளாதே
சோம்பலும் டம்பமும் தோழமை கொள்ளாதே—
[வாழ்வென்ப

வாழ்வென்பது நமக்கீந்த ஓர்வெள்ளேடு
வம்பாய்க்கிறக்கினல் வந்ததனக்குக்கேடு
ஆழித்துரும்பென அவலமாய்த் திரியாதே
அறநெறிகிலேயென்று மதைவிட்டுப் பிரியாதே—
[வாழ்வென்ப

வாழ்வென்பது பலநாள் கொண்ட பாத்திரம்
மண்ணளந்தால் மண்கிடைக்கும் அம்மாத்திரம்
நாழிஅளந்ததொன்று தாழிகொண்ட தொன்ருமோ
நன்றல்லாதது செய்யின் என்று மதுநன்ருமோ—
[வாழ்வென்ப

வாழ்வென்பது நமக்கிரவல்கிடைத்தகிலம்
வருந்தியுழுதாலன்றிக் கொடுக்குமோ அதுபலம்
ஊழ்வினையைநொந்து தாழ்மதிநண்ணுதே
உள்ளங்கைக்கிளிவிட்டு ஒளிந்தகிளியெண்ணுதே—
[வாழ்வென்ப

விதி.

விதிவிதியென்று நாள்வீணுய்க்கழித்தே
ஒதிபோலிருக்கும் உணர்வற்றமாந்தர்காள்
விதியென்பதென்ன மதியென்பதென்ன
மதியால்மதித்திரோ இதுகாறுமையோ.
மன்னுமிவ்வுலகிலே மானிடர்வாழ்விலே
முன்னைநாள்தொட்டே முயல்கின்றசக்திரண்டு
அன்னவைவிதிமதியென்பர் அவ்விரண்டுமே
பின்னிடுங்கயிறுபோல் வாழ்வினைப்பின்னுமே.
இவ்விருசக்தியில் அவ்விதிமுந்தியே
நவ்விமுன்முதுமைபின் வருவதுபோலவே
வெளவியேவந்தது பின்மதிசேர்ந்திடச்
செவ்வியும், செல்வமும், சீரும்பிறந்ததே.
மதியதுபெருகவே விதியதுவிலகுமே
மதியதுதெரியவே இருளதுவிலகுமே
கதிமதி, கலைமதி, பொருள்மதி, புகழ்மதி
விதியெனும்இருளது விலகவேவிலகவே.

---

## "EVERY FRIEND THAT FLATTERS THEE IS NOT A FRIEND IN MISERY."
## "நின்னைப் புகழ்பவன்."

நின்னைப்புகழ்பவன்றன்னையுனக்குற்ற
நேசனென்றெண்ணுதே,
பன்னும்மொழியென்னகாற்றல்லவோ
உண்மைப்பக்ஷமுள்ளோர்சிலரே.
கையில்நிரம்பப்பொருளிருந்தால் நின்றன்
கைக்குட்பலர்வழிவார்
பையிற்பணமில்லையாகில்நின்னையெட்டிப்
பார்க்காமலேபோவார்.
கொடுத்துக்கெட்டவன்றன்னைக்கண்டால்மெய்
கொடையாளிநீயேயென்பார்,
தொடுத்துச்சூட்டுவார்சொல்மாலைநீயல்லோ
தோன்றியதெய்வமென்பார்.
உள்ளநிலைமைநொடியிலுணர்ந்ததற்
கொத்துநடந்திடுவார்,
கள்ளமியற்றச்சொன்னுலும்அதற்கவர்
கங்கணம்கட்டிக்கொள்வார்.
ஆனல் திருமகள்கால்வாங்கினல் நின்றன்
அந்தஸ்தெல்லாம்பறக்கும்,
போனல் நின்பூவடியைத்தாங்கினேரும்பின்
போகார் நீபோம் வழிக்கே.
உற்றவிடத்திலுதவுகின்ருேனுனக்
குற்றவன்மற்றவன்நீ
சற்றுவருந்திடில்முற்றும்வருந்துவான்
தன்னைப்போலுன்னைக்கொள்வான்;
எப்படி நின்னெஞ்சிலப்படித்தன்னெஞ்சி
லெண்ணியிதங்கொடுப்பான்
மெய்ப்படிநண்பற்குஞ்செப்படிநண்பற்கும்
வேற்றுமையிப்படியே.

## TRAVEL AND DESCRIPTION.

### ALLAHABAD OR PRAYAG.

### யாத்திரை க்ஷேத்திர வர்ணனை

### பிரயாகை

அல்லது

### அலசாபாத்.

இது வடமேற்கு மாகாணத்தில் லெப்டினெண்டு கவர்னர் வாசஸ்தலமாயும் மாகாணத்தின் தலைமைப்பட்டணமாயு மிருக்கிறபடியாலும், டில்லி, காசி, ஆக்ரா, கல்கத்தா, பம்பாய் முதலிய பிரதான நகரங்களுக்குச் செல்லும் இருப்புப்பாதை வண்டிகள் தங்கிப்போகுமிடமாதலாலும், இந்த மாகாண ஐகோர்ட் இவ்விடத்திலிருக்கிறபடியாலும், ரயில் ஸ்டேஷன் பிர்மாண்டமாய் கட்டப்பட்டு சிறந்த வடிவமாயிருக்கிறது. 3-வது வகுப்புப் பிரயாணிகள் தங்குவதற்கு சுமார் ஒரு பர்லாங்கு விஸ்தாரமான கட்டடம் கட்டப்பட்டிருக்கிறது. இந்த ஸ்டேஷனில் இறங்கினால் பக்கி, எக்கா என்ற இரண்டுவிதமான வண்டிகள் கிடைக்கின்றன. இவைகளில் ஏறிக்கொண்டு வாசத்திற்கு தகுதியான டேராகஞ் என்ற கங்கைநதியோரத்திலுள்ள ஒரு கிராமத்திற்குப்போவது நலம்.

இந்தவிடம் திரிவேணி சங்கமத்திற்கு சமீபமாயும் யாத்திரைக்காரர்கள் தங்குவதற்கு வசதியான வீடுகளையுடையதாயுமிருக்கிறது. இவ்விடத்தில் சுமார் 1000-வீடுகளுக்கு அதிகமிராது. அனேகமாய் கங்காபுத்திரர்கள்தான நிகம். ஒரு தபாலாபீசும் போலீஸ் டாணுவுமிருக்கிறது. நமது நாட்டுக்கோட்டை செட்டிமார்கள் இவ்விடத்தில் ஒரு அன்ன சத்திரம் போட்டிருக்கிறார்கள். இதைத் தவிர வேறு சில சத்திரங்களுமுண்டு.

பூலோக சிருஷ்டிக்குமுன் பரமாத்மாவானவர் பாலரூபத்துடன் இவ்விடத்திலிருந்த அக்ஷயவடம் என்னும் ஆலமரத்தின் இலையின்பேரில் வீற்றிருந்ததாகவும், அது பிரமஸ்வரூபமானதென்று எண்ணப்பட்டு வந்ததாகவும், பிரபஞ்ச சிருஷ்டியான பிறகும் அந்த விருக்ஷம் சுவர்ணமயமாய் பிரகாசிக்க பிர்மாவானவர் இந்தவிடத்தில் பத்து அசுவமேதயாகங்கள் செய்ததாகவும், மகாவிஷ்ணு பிரசன்னராகி என்னவரம் வேண்டுமென வினவ—பிர்மாவானவர் இந்த ஸ்தலமானது விஷ்ணு க்ஷேத்திரமென்று பெயர் பெற்றிருப்பதோடு எனது பெயரும் சம்பந்தப்பட்டு பிரகாசிக்கவேண்டுமென்று விரும்பியதாகவும், அதற்கு அவரும் சம்மதித்து இனிமேல் இந்த ஸ்தலம் விஷ்ணு-பிரஜாபதி க்ஷேத்திரமென்று அழைக்கப்படுமென்று கூறி மறைந்ததாகவும், இப்பொழுதும் இதற்கு தசாஸ்வமேத கட்டம் என்று பெயர் வழங்குவதாகவும் கூறப்படுகிறது.

மேலும் சூரியபகவானுடைய தேவியாகிய சாயாதேவி கர்ப்பவதியாய் தபசு செய்துக் கொண்டிருக்கையில் சூரிய பகவான் அத்தேவியுடன் சேர எண்ணங்கொண்டு சமீபத்தில் நெருங்கவும் தேவி சம்மதிக்காமல் தடுக்க, ஆதித்தன் மிதமிஞ்சிய மோகத்தினால் அவளைத் தீண்டச் சென்றதாகவும், ஆதித்தனுடைய உஷ்ணத்தினால் மேற்படி தேவியின் கர்ப்பத்தில் பாதி சாம்பலாகவும் மற்றபாதி பிண்டமாகவும் மாறி இருவரும் பரவசமடைய அப்பொழுது ஹரிஹரர்கள் பிரசன்னராகி, ருத்திரமூர்த்தியானவர் தமது பராசக்தியை அந்த பிண்டத்திற்குள் ஆவாகனஞ்செய்து ஒரு புருஷனை ஜனிப்பித்து அந்த புருஷனுக்கு எமதர்மராஜன் என்று பெயரிட்டு தென்தேசங்களுக்கு அனுப்பி பாவிகளை சிக்ஷிக்கும்படி நியமித்தாராகவும், மஹா விஷ்ணுவானவர் மேற்படி பிண்டத்தின் பாதியாகிய சாம்பலில் தமது சக்தியை ஆவாகனஞ்செய்து யமுனை என்ற பெயருடன் ஒரு ஸ்திரீயை ஜனிப்பித்து அவளை நதிரூபமாய் உலகத்தாருடைய பாபங்களைப் போக்கும்படி நியமித்ததாகவும் ஸ்தல மகத்துவத்

தில் கூறப்படுகிறது. தவிர பகீரதர் கங்கையை பூலோகத்திற்குக் கொண்டுவரும்பொழுது, கங்கை இவ்விடத்தில் பிரவாகிக்க யமுனை எதிர்கொண்டுபோய் வணங்கி தன்னுடன் கலந்து பிரவாகிக்க வேண்டுமென்று பிரார்த்திக்க கங்கை யமுனையை நோக்கி "ஏஙங்கமாய்! நீ பிரதிஷ்டை பெற்றவள், நான் உன்னுடன் கலந்து பிரவாகித்தால் உன்பெயர் மட்டும் பிரபலமாகுமேயன்றி எனது பெயர் வெளிப்படாதென மயங்குகிறேன்" என்று சொல்ல, யமுனை கங்கையை நோக்கி "ஏ தேவி! பயப்படாதே, இந்த க்ஷேத்திரமுதல் பெயர் உன்னதாகவே யிருக்கட்டு" மென்று சம்மதிக்க, கங்கையும் யமுனையும் இவ்விடத்தில் சங்கமமானதாகவும், அன்று முதல் கங்கையின் ஜலம் வெண்மையாயும், யமுனையின் ஜலம் இளநீலவர்ணமாகவுமிருந்தாலும் சமுத்திரத்தில் விழுகிறவரையில் கங்கை என்ற பெயரே பெற்றதாகவும் சொல்லப்படுகிறது.

அன்றியும் பிர்மாவானவர் அஸ்வமேதயாகங்கள் செய்தபிறகு இந்த ஸ்தலத்தை வர்ணிக்கத் தொடங்கி முடிக்கமாட்டாமல் மயங்க சரஸ்வதி அதை முடித்துக்கொடுப்பதாகக்கூறி முடிக்கமாட்டாமல் திகைத்து உலகரக்ஷணார்த்தமாக யோசனை செய்துக்கொண்டிருந்த திரிமூர்த்திகளைப் பார்க்க நாணியகாலத்தில், படபன் என்னும் இராக்ஷதன் தோன்றி தனது கடும்பசியினால் உலகத்தாரை இம்சைசெய்யத் தொடங்கவே, சரஸ்வதியானவள் அவன்முன் தோன்றவும், அவன் மோகித்து நெருங்கவும், பசிப்பிணியால் வருந்தும் உன்னை விவாகஞ் செய்துக்கொள்ள பயப்படுகிறேனென்று சரஸ்வதி கூறவும், அந்தப் பசியை நீதான் தீர்க்க வேண்டுமென்று ராக்ஷதன் வேண்டவும், பசி நீங்க ஆகாரம் கொடுப்பதாக அழைத்துக் கொண்டுபோய் சமுத்திரத்தைக்காட்டி ஜலத்தை பானஞ்செய்யும்படிவிட்டு பிரயாகை ஸ்தலத்தைக் காணவந்ததாகவும், அப்பொழுது கங்கையும் யமுனையும் இந்த சரஸ்வதியின் நடனத்தைக்காண விரும்பியதாகவும், சரஸ்வதி பிர்மாவுடன் கூறியபடி பிரயாகையை வர்ணிக்கமாட்டாதவளாய் வெட்கி தகப்பனார் பரிகாசம் செய்வாரென்ற எண்ணத்தினால் பயிரங்கமாகத் தோற்றாமல் கங்கை யமுனைக்குள் அடக்கமாகி பிரவாகத்தில் விளையாடிச் சென்றதாகவும், இப்படி மூன்று நதிகளும் சங்கமமாவதால் மோக்ஷலக்ஷ்மி தலைரோமத்தின் மூன்று பின்னலென்றும், அதாவது கங்கையும் யமுனையும் இந்தவிடத்தில் உலகத்தாருடைய பாவங்களைக் கத்தரிக்க கத்தரிக்கோல்களானதாகவும் அக்கோல்களுக்கு இடையே ஆணியாக, சரஸ்வதி ஸ்தானத்தைப்பெற்று உபகரித்ததாகவும், ஆகவே திரிவேணி என்று பெயர் பெற்று விளங்குவதாகவும் கருதப்படுகிறது. இப்பொழுதும் தம்பதி சகிதமாக இந்த க்ஷேத்திரத்திற்கு வருகிற யாத்திரைக்காரர்கள் திரிவேணிதானம் என்பதாக ஒரு சடங்கு செய்கிறார்கள். அதாவது—புருஷனும் ஸ்திரீயுமாக நூதன வஸ்திரங்களைத் தரித்துக்கொண்டு வாத்தியத்துடன் திரிவேணி சங்கமஸ்தானத்திற்குச் சென்று ஸ்திரீயினுடைய சிரோரோமத்தை மூன்று பிரிவாக்கி புருஷன் பின்னியபிறகு திரிவேணிக்கும் கத்தரிக்கோலுக்கும் பூஜித்து பிரார்த்தனைசெய்துக் கொண்டு ஸ்திரீயின் சிரோரோமத்தின் நுனியில் மூன்று அங்குல பிரமாணம் கத்தரித்து ஒரு தட்டத்தில்வைத்து கங்கா புத்திரனுக்கு தானம் செய்கிறார்கள். இந்த தானத்தைப் பெற்றுக்கொள்ளுவதற்கு கங்காபுத்திரர்கள் அதிக தொகை முதலியவைகளை எடுத்துக்கொண்டு கத்தரித்த ரோமத்தை திரிவேணியில் விடுகிறான். அது சற்றுதூரம் செல்வதற்குள் நீரினால் சுழற்றப்பட்டு அமிழ்த்தப்படுகிறது. இந்தச் சடங்குசெய்கிற ஸ்திரீகளுக்கு விதவை

ஜென்மமில்லை என்பது ஐதீகம். கங்காபுத்திரர்களுக்கு கொடுக்க சக்தியில்லாதவர்கள் தாங்களே மேற்படி சடங்கைசெய்து ரோமத்தை திரிவேணியில் போட்டுவிடுகிறார்கள். தவிர இந்தவிடத்தில் பிராணதத்தம் செய்பவர்கள் ஜன்மாந்தரத்தில் விரும்பிய சித்திகளையடைந்து அனுபவித்து, மறுபடியும் இந்த புண்ய பூமியில் பிறந்து, பிறவித்துன்பமின்றி பேரானந்தத்தை யனுபவிப்பார்களென்று ஸ்தல புராணத்தில் கூறியிருப்பதால் இக்காலத்திலுங்கூட அநேக தபசிகள் அந்தரங்கமாக கங்கையில் இறங்கி பிராணதத்தம் செய்வதாக பிரஸ்தாபமுண்டு.

முசுகுந்த பிர்மசாரி என்னும் ஓர் தபசி தான் மண்டலாதிபதியாக வேண்டுமென்று கருதி தனது தேகத்தில பாதி பாகத்தை யறுத்து யக்கியத்தில் ஆகுதி செய்து பிராணனை விட்டதாகவும், அவருடைய சிஷர்களும, அந்த குருவுக்கே மறுஜன்மத்தில் மந்திரிகளாக வேண்டுமென்றும், அப்பொழுது பூர்வ ஜன்மஞாயான மிருக்க வேண்டுமென்றும பிரார்த்தித்துக்கொண்டு, இந்த ஸ்தல மகத்துவத்தை எட்டு ஸ்லோகங்களாகச்செய்து ஒரு ஓலையிலெழுதி கடலைபொரி விற்றுவந்த ஒரு கிழவியிடம் கொடுத்து மேற்படி யாககுண்டத்தில விழுந்து பிராணனை விட்டதாகவும, மறுஜன்மத்தில் அந்த முசுகுந்தன் ஆக்பர் பாதுஷாவாகப் பிறந்து டில்லியில் சக்கரவர்த்தியாயும், சிஷர்கள் அவருடைய மந்திரிகளாயும பிறந்திருக்கும் காலத்தில ஒருநாள் மந்திரிகள் கடலைபொரி விற்றுவந்த கிழவியிடத்திலிருந்த ஸ்தல மகத்துவமாகிய எட்டு ஸ்லோகத்தை வாங்கிக்கொண்டுவந்து பாதுஷாவிற்குக் காட்ட அவர் அதிக ஆநந்தமடைந்து அன்றுமுதல் இந்த ஸ்தலத்திற்கு அலகாபாத்து=அல்லா=கடவுள், பாத்து=பட்டணம், என்று பெயரிட்டு அன்னியர் இதை அழிக்காதபடி ஒரு அழகான கோட்டையையும் கட்டினதாகவும் சொல்லப்படுகிறது. இந்தக் கோட்டை கங்கை யமுனை சங்கமமாகுமிடத்தில் எப்படிப்பட்ட பிரவாகத்திற்கும் அசையாதபடி கட்டப்பட்டிருக்கிறது. கோட்டையை சுற்றிய அகழில் இப்பொழுது ஜலமில்லை. ஆள் ஒன்றுக்கு ஒரு பைசா வாங்கிக்கொண்டு கோட்டைக்குள் விடுகிறார்கள். ஒரு சிபாய் நேராக பிரயாகை ஈஸ்வரர் ஆலயத்திற்கு அழைத்துக்கொண்டு போகிறான். இந்த ஆலயம் பூமி மட்டத்திற்குக் கீழ் செய்யப்பட்ட குகைபோனறது. இந்த ஆலயத்திற்குள் விநாயகர், தண்டபாணி, கங்காதேவி, மகாவிஷ்ணு முதலிய பல விக்கிரகங்களிருப்பதுடன் பூர்வமான வடவிருக்ஷத்தின் அடிபாகமுமிருக்கிறது. மேல் கிளைகளை வெட்டிவிட்டார்கள். ஆயினும் மரம் பட்டுப்போகவில்லை. வருஷத்திற்கு ஒருதடவை சில தளிர்கள் தோன்றி வாடிப்போவதாகத் தெரியவருகிறது. இவ்விடத்தில் சில பண்டாக்கள் என்றவர்களிருந்துகொண்டு யாத்திரைக்காரர்களிடம் பைசா கேட்கிறார்கள். இக்குகை அதிக இருட்டாயிருந்தபடியால் மேல்பாகத்தில் இப்பொழுது சிற்சில பலகணிகளை வைத்திருக்கிறார்கள், கோட்டையின் மற்ற பாகத்தில் யாத்திரைக்காரர்களை விடுவதில்லை. மேற்படி கோவிலைப் பார்த்துக்கொண்டு வெளிப்புறத்திலுள்ள கோட்டைவாயில் வழியாக வெளிப்படவேண்டியதே. இதற்குள் சில ஆபீசுகளும் பல யுத்த ஆயுதங்களுமிருக்கின்றன. ஒரு ஐரோப்பியருடைய சமாதியும் அதன்பேரில் ஒரு கோபுரமபோன்ற கட்டடமும் கட்டப்பட்டிருக்கிறது.

"திரிவேணிமாதவம் சாம்பம், பரத்வாஜஞ்ச
வாசுகீம், வந்தே அக்ஷயவடாம் சேஷம்,
பிரயாகம் தீர்த்தநாயகம்."

—என்ற ஸ்லோகத்தை வடவிருக்ஷத்தடியில் சொல்லவேண்டுமாம்.

இந்த ஸ்லோகத்தின்படி இந்தக் கோட்டைக்குள் தரிசித்ததுபோக சோமேஸ்வரர் ஆலயம் கங்கைநதியின் அக்கரையிலிருக்கிறது. படகில் ஏறி அக்கரை சென்று சற்று தூரம நடந்து சென்றால் ஒரு பூர்விகமான ஆலயமும் அதில் சோமேஸ்வர லிங்கமும் இருப்பதைத் தரிசிக்கலாம். டோராகஞ்சியிலிருந்து முக்கால் மைல் தூரத்தில பரத்வாசர் ஆஸ்ரமமிருக்கிறது. இவ்விடத்தில்தான் பரத்வாஜரை இராமலக்ஷ்மணர்கள் கண்டு தரிசித்ததாகக் கூறப்படுகிறது. இவ்விடத்தில் ஒரு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்யப்பட்டு பூஜை செய்து வரப்படுகிறது. மிகவும் ஆரோக்கியமும் இன்பமும் தரத்தக்கவிடம். இப்பொழுது இதற்கு சமீபத்தில் சில ஐரோப்பியர்களுடைய பங்களாக்கள் காணப்படுகின்றன. சற்று தூரத்தில் சில தர்மசாலைகள் இராஜாக்களால் கட்டப்பட்டிருக்கின்றன. இதற்கு சமீபத்தில் சங்கரி ஆலயமென்ற ஒரு கோவிலிருக்கிறது. இந்த அம்மனுக்கும தினப்படி பூஜை நைவேத்தியம் முதலியவைகள் கிரமமாக நடக்கின்றன. பிந்து மாதவர்கோவில் அரைமைல் தூரத்திலிருக்கிறது. இது அவ்வளவு பெரிய ஆலயமன்று.

திரிவேணியில் ஸ்நானஞ் செய்கையில் சொல்லும் சங்கல்பமாவது.—

“ஆரியவர்த்தந்தர்க்க பிர்ம்மவர்த்தைகதேச, விஷ்ணு பிரஜாபதி க்ஷேத்திரே, ஷட்கோணமத்தியே, அந்தர்வேதியாயாம், பாகிரதீயாயாம் பஸ்சமபாகே, காளீந்திய உத்திர தீரே, வடஸஸ்யபர்வதிகபாகே விக்கிரமசகே, பவுத்தாவதாரே,—வருஷே” என்று கூறி மற்றவைகளையும தக்ஷணதேசரீதியாகக் கூறப்படுகிறது.

இந்த அலகபாத்து என்னும் பட்டணம் சுமார் 10 மைல சுற்றளவுள்ளதாய் 150,000 ஜனங்கள் வாசஞ்செய்யப்பட்டது. இவ்விடத்தில் இந்துக்கள் மகமதியர்கள் என்ற வித்யாசத்தைக் கண்டுபிடிப்பது சாத்தியமில்லாதபடி பஞ்சகவுடர்களுடைய நடை உடை பாவனைகள் மகமதியர்களைப்போலவே காணப்படுகிறது. ஸ்திரீகள் தங்களுடைய துணிகளை கோரமாய் அணிந்துக்கொள்வதினாலும், அளவுக்குமிஞ்சிய அதிகமான வெள்ளி நகைகளை அணிந்துக்கொள்வதினாலும் அவலக்ஷணமாகக் காணப்படுகிறார்கள். இவ்விடத்தில் கத்திரி, உருளைக்கிழங்கு, மொட்டைகோஸ், பட்டாணி, வெங்காயம், இஞ்சி, பொதீனா, முள்ளங்கி, கொய்யாப்பழம் முதலியவைகள் ஏராளமாய் விற்கப்படுகின்றன. கொய்யாப்பழம், இலந்தைப்பழம் இவைகள் அளவுக்கு மிஞ்சிய காத்திரமாயும் சரசமாயும் கிடைக்கிறது. நம் தேசவாசிகளுக்கு உடனே ஜ்வரத்தை யுண்டாக்கத்தக்கது. கோதுமைமாவு ரொட்டியும் துவரம்பருப்புமே இவ்விடத்திய ஜனங்களுக்கு முக்கிய ஆகாரமாதலால் நல்ல அரிசி, புளி, மிளகாய், நெய் முதலியவைகள் கிடைப்பதில்லை. பலர் கோதுமைமாவில் செய்த பூரி, லட்டு முதலியவைகளைத் தின்று காலங்கழிக்கிறார்கள். இவ்விடத்தில் மாடுகளும் எருமைகளும் நன்றாக வளர்ந்து கொழுத்து புஷ்டியாகவும் அழகாகவும் காணப்படுகின்றன. சென்னையில் ‘ரேக்ளா’ என்று கூறப்படும் வண்டிகளைவிட சற்று பெரிதான ‘எக்கா’ என்னும் ஜட்காவண்டிகள் அதிக விநோதமாய் சவாரிக்கு சற்றும் ஒவ்வாததாயிருக்கிறது. இந்த வண்டிகளை உடனே முனிசிபால்டியாராவது கவர்ன்மெண்டாராவது நிறுத்தும்படி கட்டளையிட்டு சென்னையிலுள்ள ஜட்காவண்டிகள் போன்றவைகளைச் செய்து விற்றாவது காட்டியாவது நடவடிக்கைக்குக் கொண்டுவரவேண்டும். ‘எக்கா’ என்னும் வண்டிகள் மழைக்கும் வெயிலுக்கும் உபயோகமின்றி யிருப்பதுமல்லாமல் மகா

அநாகரீகமாயும் அபாயகரமாயு மிருக்கிறது. இந்த ஆபாசமான வண்டியின் அடிப்புறத்திலுள்ள பெட்டிகளை பித்தளை தகட்டினால் செய்திருக்கிறார்கள். பக்கிகள் என்னும் கோச் வண்டிகள் கூடியவரையில் நன்றாகவிருந்தாலும் அதிகமான ஆட்களையும் சாமான்களையும் ஏற்றுவது பரிதாபமாயிருக்கிறது.

கபிலை ஏற்றம் இறைக்கும் மாதிரி இவ்விடத்தில் வித்தியாசப்படுகிறது. பரித்தண்ணீரை துலைவாயில் ஒருவன் ஊற்றியவுடனே எருதுகளின் நுகத்தடியில் மாட்டியிருக்கப்பட்ட வடக்கயிற்றை, எருதுகளை ஓட்டிக்கொண்டு போகிறவன், கழற்றிவிடுகிறான். வடக்கயிறுடன் பரி அதிக வேகமாய் கிணற்றிலிறங்கி விடுகிறது. உடனே நுகத்தடியுடன் தயாராயிருக்கும் வேறுமாடுகளைக் கொண்டுவந்து வடக்கயிற்றை மாட்டிவிடுகிறான். இப்படி ஒரு ஏற்றத்திற்கு மூன்றுஜோடி மாடுகளை உபயோகிக்கிறார்கள். நமது தேசத்தில் மாடுகளை பின்னுக்குப் பின்னாக இழுத்து வருத்துவதுபோல் இவ்விடத்தில் வழக்கமில்லை—தண்ணீர் அதிகமாயும வேகமாயும் இறைக்கப்படுகிறது.

இந்தப் பிராந்தியங்களில் கடைத்தெருவுக்கு 'சவுக்கு' என்று சொல்லுகிறார்கள். இந்த கஸ்பாவிலுள்ள சவுக்கானது அதிக விஸ்தாரமானது. தெருக்களில் வீடுகள் 3-4-5 அடுக்கு மெத்தைகளோடு மகமதியர்களுடைய கட்டடபாவனையாக விருப்பதன்றி கீழ் அடுக்குகளில் பலவித வியாபார வஸ்துக்களையுடைய கடைகளை யுடைத்தாயிருக்கின்றன. சவுக்கென்னப்பட்ட விடத்தில் சாயந்திரங்களில் சென்னையில் குஜிலிசேர்வதுபோல பலவித துணிமணிகளும, காய்கறி பழவர்க்கங்களும், பலவித தட்டுமுட்டுகளும் வந்து சேர்ந்து விற்கப்படுவதால் ஜனங்கள நடந்துசெல்வதற்கும் வழியின்றி தவித்து நின்றுவிடுகிறார்கள். இவ்விடத்தில் வசிக்கும் அங்கிலேயர்கள் கேனிங்டவுன் என்ற விஸ்தாரமான விடத்தில் பங்களாக்களை அதிக அழகாக கட்டிக்கொண்டு வசிக்கிறார்கள். சுதேசிகள் வசிக்கும் பாகத்திற்கும் அங்கிலேயர்கள் வசிக்கும் பாகத்திற்கும் மத்தியில் ரயில்பாதை செல்லுகிறது. அங்கிலேயர்கள் வசிக்கப்பட்ட பாகத்தில் எல்ஜின், மேயோ, ஆல்பர்ட், ஸ்டேன்லி முதலிய ஐரோப்பியர் நாமத்தைக் கொண்ட தெருக்களிருக்கின்றன. இத்தெருக்கள் அதிக விஸ்தாரமானவைகள். இவ்விடத்தில் ஐகோர்ட், மேயோஹால், டவுன்ஹால், கவர்ன்மெண்டு காலேஜ், பீகம் ஜிஹாங்கிர் முதலிய கட்டடங்கள் பார்க்கத்தக்கவைகள். ஐகோர்ட் கட்டடம் நான்கு பிரிவாயிருக்கிறது. கவர்ன்மெண்டு காலேஜ்ஹால் அதிக பெரியது. இதற்கு ஜெயப்பூர் மகாராஜாவேண்டிய பணவுதவி செய்திருக்கிறதாகத் தெரிய வருகிறது. இந்த கல்லூரியில் டில்லி, கான்பூர், லக்ஷ்மணபுரி, மதுரா, அயோத்தி முதலிய விடங்களிலிருந்து ஏராளமான பிள்ளைகள் வந்து படிக்கிறார்கள்.

இந்தப்பட்டணத்தில் அலகாபாத்து என்ற ரயில் ஸ்டேஷனைத்தவிர அல்லங்கஞ் என்ற ஒரு சிறிய ஸ்டேஷனுமுண்டு. டீடராகஞ் என்ற ஊரிலிருந்து இந்த ஸ்டேஷனுக்கு மூன்றுமைலிருக்கலாம். யாத்திரைகாரர்கள் இந்த விடத்தில்தான் கங்காஜலத்தை செம்புகளில் எடுத்து வாய்மூடி தங்கள் தங்களூர்களுக்கு அனுப்புகிறார்கள். இதற்கும் வடமேற்கிலுள்ள ஹரிதுவாரமென்ற விடத்திற்கு செல்லுகிறவர்கள் இவ்விடத்தில் கங்கை எடுப்பதில்லை. இவ்விடத்தில் யாத்திரைகாரர்கள் தீர்த்த ஸ்ரார்த்தம் செய்து பிதுர்க்களுக்கு பிண்டமிடுவது வழக்கம். வழங்கும் பாஷை இந்துஸ்தானியாதலால் அது தெரியாத தெக்ஷணதேச யாத்திரைக்காரர்களுக்கு கஷ்டம் அதிகமாகவேயிருக்கும்.

## CHILDREN'S PAGE.
## சிறுவர்க்கான பக்கம்.
## THREE WARNINGS.
## மூன்று எச்சரிக்கைகள்.

---

மரத்துக்கு வயசு ஆக ஆக வேர் ஊன்றி பூமியில் அதிகப் பிடிப்பு உண்டாகிறது. மனிதர்களுக்கும் மரணம் நெருங்க நெருங்க ஆசை இளம்பிராயமடைகிறது. இதைச் சொல்லாதவர்கள் இல்லை. இதை நம்பி நடந்தவர்களையும் காணோம். இந்த உண்மையைத் தெரிவிக்க ஓர் கதை சொல்லுகிறேன், கேளுங்கள்.

முன்னொரு காலத்தில் நர்மதா தீரத்தில் ஆனந்ததாண்டவபுரம் என்ற ஊரில் கலியாணராமன் என்று ஓர் பிராமணப்பையன் இருந்தான். அவன் சிறுவயதில் ஆற்றில் குதித்து, நீந்தி, மரங்களேறிப் பழம் பறித்துத் தின்று, விளையாடிக்கொண்டே இருப்பான். இப்படி தாமரைத் தடாகத்தில் ஹம்ஸபட்சி புஷ்பத்தைவிட்டுப் புஷ்பம் சிறிதும் சிரமமில்லாமல் இனிமையாய்ப்போவதுபோல், சுகத்திலிருந்து சுகத்துக்குத்தாவி சுமார் 20-வருஷங்கள் கழித்தான். இக்கால முழுவதும் ஒருவாறு ஆலோசிக்குமிடத்து அவ்வளவு புஷ்பங்கள் கோத்த மாலைபோலும், தங்கக் கொடிபோலும் காணும். துக்கமென்றது அறியான். சுகத்தின் எவ்வகையும் அவன் கையிலிருந்தது. எவரோடும் ஹாஸ்யமாய் பேசிக்கொண்டு உல்லாசமாய்த்திரியும் சுபாவமுள்ள இவனுக்கு ஏற்றப்படி அடுத்த கிராமத்தில் இவன் உறவில் 'கலியாணி' என்ற சுந்தரியை விவாகம் பண்ணிவைத்தார்கள். அவன் சம்பத்துக்கும், உற்றார் ஐக்கியத்துக்கும், தேசகாலத்தின் வளத்துக்கும், அவன் சுபாவத்துக்கும் தக்கபடியே கலியாணசாம்ராஜ்யமும் இருந்தது. புஷ்பப் பந்தல்களும், பாட்டுக் கச்சேரிகளும், வாத்திய கோஷங்களும், விகடகவிக் கூட்டங்களும், நாட்டியங்களும், குளிர்ந்த முகங்களும், சிவந்த உதடுகளும் நிறைந்த கலியாணமண்டபம் அந்த க்ஷணத்துக்கு பூலோக ஸ்வர்க்கம் போலிருந்தது.

அவர்களிருவர்களும் தம்பதிசமேதராய் மண்டபத்திலிருக்கையில் ஓர் கிழவர் பின்னண்டையில் வந்து 'அப்பா கலியாணம், சற்று இங்குவா ஒரு சேதி' என்று தட்டி அழைத்தார். பெரியவரைக்கண்டு நமஸ்கரித்துப் பின்சென்றான். தனிமையாய் மற்றோரறையில் சென்று 'அப்பா நானொரு தெரியுமோ இல்லையோ? தருமராஜனன்னா? கலியாணியைவிட்டு என்னோடு புறப்பட்டுவா' என்றார்.

கலியாணம்.—'உங்களோடேயா? கலியாணியைவிட்டா? என்ன வயசாயிற்று? இதென்ன அநியாயம்? அதுவுமல்லாமல் நான் எங்கே பரலோகமெங்கே? என் மனதெல்லாம் எங்கேயோ இருக்கே, இன்றைக்குத்தானே கலியாணம்; உங்களுக்குத் தெரியாதா?'

தருமவடிவாயிருந்த கிழவர் இவன் பதருவதைக்கண்டு மனந்தளர்ந்து,—'நல்லது, இப்போ போகட்டும், என்பேரிலும் மனஸ்தாபம் வேண்டாம். மூன்றுதரம் ஞாபகிக்க வருவேன். கடைசியில் ஒரு அதிருப்தியுமில்லாமல் வரத்தயாராயிருக்கவேண்டும்' என்றார். அவர் பேசும்பொழுதே வலதுகையிலிருந்த காலசக்கிரம் கீர்த்தயவாய் சுற்றிக் கொண்டேயிருந்தது.

அவன் ஆயசுக்கு முதல் முதல், பூப்பந்தல்களை அறியாது, சப்தங்களொன்றும் தெரியாது, மனையாளை மறந்து உலகமுழுவதும் தானும் தன்னோடிருந்த கிழவரும் தான்

என்று சிந்தித்து தூணைப் நின்றான். ஒன்றும் சாணாது வெறித்தான்.

சுவப்நம்போல் இந்த அவஸ்தை சற்றிருந்து மாறிற்று. முன்போல் யோஜனையின்றி போதுபோக்கத் தலைப்பட்டான். கலியாணம் நிறைவேறிக் குடியேறவே, முதிர்ந்தோர்கள் இலையுதிர்காலத்து இலைகள் போல் பழுத்து உதிர, மற்றவை புதிதாய் துளிர்க்க, புதுக் குறல்கள் விடு நிறைய, சேர்ப்பதும், செல வழிப்பதும், விற்பதும் வாங்குவதும், சிரிப்பும் அழுகையுமாய், பிறப்பும் இறப்பும், கொள்வதும், கொளுத்துவதுமாய் காலம்செல்லவே கலியாணராமய்யன் கிழவரைக் கண்டதினம் இருந்தபடி இருப்பது அசாத்தியம்.

சந்திரன்போன்ற முகம் எங்கே? பதினாயிரம் கவலைகள் அவர் முகத்தில் பள்ளம்பண்ணி பதுங்கிக்கிடக்கின்றன. பழயகோட்டை வாசற்படிக் கல்போல் பற்களெல்லாம் இருந்தவிடம் தெரியாது விழுந்துபோயின. ஆகாயத்தோடு சம்பாஷித்த வெற்றிக்கொடிபோல் நின்ற தேகம் பூமியின் ஆசைமுதலியவற்றின் ஆகர்ஷண சக்தியால் வளைந்து தரையோடு தரையாயிற்று. துஷ்யந்தன் குதிரைகள் போல் பாதி பூமியிலும் பாதி முற்றும் மறவாத ஆகாயத்திலுமாயிருந்த கால்கள், பூமியில் புதைவதுமன்றி அதைவிட மனமில்லாதது போல் மற்றொரு காலும்* அபேட்சிக்கின்றன. என்ன ஆச்சரியம்! முதனாள் தன்னூரிலிருந்து கோவில் குளங்களைப்பார்த்து, தன் உறவினர்களோடு உத்திரவுபெற்று சாயந்திரம் ரயிலேறி அதிற்படுத்துறங்கி மறுநாள் காலையில் தான்பாராத கேட்காதகாட்சியும், மலையும், துஷ்ட மிருகங்கள் கர்ச்சனையுமுள்ள ஒரிடத்தில்வந்து, வேறு நடையுடை பாவனையுள்ளவர்களையும் காண்பவனுக்கு என்னமாயிருக்கும்? அம்மாதிரியே, கலியாணத் தன்மைக்கு

*அதாவது 'ஊன்றுகோல்.'

உலகவாழ்க்கையென்ற தூக்கத்தில் விழுந்தவர், 60-வருஷங்களான பிறகு விழித்தாரானால் தன்னுடைய ஸ்திதியும் தோன்றும். நம் கலியாணராமனுக்கு அவ்வளவு சீக்கிரம் விழிப்புக்கொடுக்கவுமில்லை. அவர் மனைவியாகிய கலியாணிப்பாட்டி மாட்டுப்பெண்களுக்கு தான் காலமே கறிகாய் வாங்கின சமர்த்தைப் பற்றி புகழ்ந்துகொண்டு மறுநாள் அமாவாசியைக்குவேண்டிய கறி குழம்பு திட்டம் சொல்லிக்கொண்டிருந்தாள். கலியாணிப் பாட்டியைக்கூப்பிட்டு: 'அடியே, உன் பேரன் பேத்திகளை கத்தவிடாமல் தூங்கப்பண்ணு' என்று கூவிப்போட்டு தாத்தா மாடியில்போயிருந்தார். பாட்டியும் சற்றுக் கழித்துவந்து ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருக்கும் போது, வடக்கே திரும்பி 'அருந்ததி அருந்ததி என்று உங்களை கலியாணத்தின்போது பார்க்கச் சொன்னீரே, இதுதானோ அது?' என்றாள். அடுத்த நிமிஷம் 'ஆநந்தவல்லிக்கு கலியாணம் பண்ணவேணு'மென்றாள். தாத்தாவுக்கு தருமராஜா கலியாணப்பந்தலில் சொன்னது சரீரென்று ஞாபகத்தில் வந்தது. என்னசெய்வார்? வருத்தப்படுவாரா? ஆச்சரியப்படுவாரா? வருஷம் 60-ஆயிற்று. அது நடந்து இந்த ஞாபகம் ஒருதரமாவது தட்டுப் படவில்லையே. எதிரில்வந்து நின்றார் தருமராஜரும்: தாத்தா கண்ணைமூடி யோஜித்தார்.

கலியாணராம.—"அதுக்குள்ளே வந்துவிட்டீரே."

தருமரா.—"இதவா சுருக்கு, நன்றாயிருக்கு. நீ நிஜமாய் பரிகாசம் பண்ணுகிறாய். நான்வந்து இன்றைக்கு 60-வருஷமாகிறது."

கலியாணராம.—"அதுக்கென்ன இப்போ? கிழவனை உபத்திரவிக்கிறது தருமமா?"

பின்னும் யோஜித்து இந்த விசை மீள்கிறது அசாத்தியமென்றெண்ணி, கோர்ட்டிலடிபட்ட

மனுஷியனானதால், கலியாணராமய்யன்: "ஆமா? உமக்கென்ன அதிகாரம்? வாரண்டு எங்கே? ஊரெல்லாம் தான் 'போர்ஜரி'யா யிருக்கே, நீர் கொண்டுவந்தது என்ன சரி? ருஜுவுண்டா? அதுவே போகட்டும், மூன்று நோட்டிஸ் தருகிறேன் என்று சொன்னீரே. நானுந்தான் நாளுக்குநாள் காத்திருந்தேன். இதிலேயே போது போயிற்று. இப்போ யார் என்னசெய்கிறது. இப்படி திடீரென்று வந்தால் எப்படி?" என்றான்.

தருமரா.—"நான் என்றைக்கு வந்தாலென்ன? என்னை ஒருவரும் அதிதியாக அழைக்க மாட்டார்கள். நீ இந்த வயசில் ஓடி ஆடித்திரிந்திருப்பாயென்று நினைக்கவே யில்லை. போகட்டும் அந்த மட்டும் சந்தோஷம் தான்" (வலதுகைச் சக்கிரத்தைப்பார்த்து), "ஆ! டே காலம் ஓடி விட்டது."

கலியாணராம.—" அய்யா, நாலுவருஷமாய் நொண்டி, அவ்வளவு அவசரப்படப் படாது."

தரும.—"கண்ணிருக்கோ இல்லையோ"?

கலியா.—"அதுவும் போயிட்டுதே!"

தரும.—"சுற்றி எல்லாரும் பிரியமாயிருக்கிற தாய்ச் சொல்லுகிறார்களே."

கலியா.—"காதும் கேட்கிறதில்லையே!"

தரும.—"சரி, காலும் முடமாய், கண்களும் பொட்டையாய், காதும் செவிடாய் இருந்தால் நான் சொன்ன மூன்று எச்சரிக்கையும் ஆயிற்று. புறப்படு."

கலியாணராமன் என்ன செய்வான்! முகம் வெளுத்தது. திகைத்து நின்றான். சற்று தெளிந்து 'அங்காவது மேளதாளமும், கோட்டுக் சச்சேரியும் இருக்குமா?' என்றான்.

தருமராஜா.—"இவ்வளவு நாளிருந்து கோர்ட்டும், நோடிஸும், மேளமும், தாளமும் தவிர ஒன்றும் கண்டு கேட்டறியாயோ? நசிகேதஸ் என்பவன் என்னை மன்றாடி தனத்தையும், சுகத்தையும் எவ்வளவு நான் கொடுத்தாலும் அவையெல்லாம் மறுத்து மறுஜன்ம மன்றியில் செய்யும் பிர்ம்மஞானத்தைப் பெறவேண்டுமென்று என்னை நாடினது கேட்டிராயோ? இதை உபனிஷத் கதறுகிறதன்றோ? சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் நாளொருதரம் நமக்கு காட்சி கொடுக்கும்படி வானத்தில் உலாவ, சமுத்திரம், ஆதிகாலம் துவங்கி, ஈசுவரனுடைய விலாசத்தைக்கண்டு ஆனந்தம் பொங்கி, தன்னுள் அடக்கமாட்டாமல் தன்னை யடுத்த பூமிக்கு வந்து கூவ, புல்லிலும், புஷ்பத்திலும், சிறிதிலும், பெரிதிலும் அவர் விலாசம் எங்கும் நிறைந்திருக்க, பகவான் ஸ்ரீராமன் கிருஷ்ணன் காலால் நடந்த இந்த பூமியில் நீ இத்தனை வருஷகாலமாய்க் கண்டது இவ்வளவு தானா?"

ஸ்படிகக் கல்லில் ஜலம் ஊருவதுபோல் கண்ணில் நின்றும் நீர்பெருக ஆ—என்று பெருமூச்சுவிட்டான் கலியாணராமன். தருமரும் தன் பாசத்தை அவன்மீதெறிய அவன் ஆத்துமா, இந்த பழைய குடிசையைவிட்டு தன்னிடம் சென்றது.